உமாபதி சிவாசாரியார் அருளிய

# திருவருட்பயன்

விளக்கவுரை





கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக

உரையாசிரியர்
பேராசிரியன்
திருவோத்தூர் வையாபுரி முருகேசன்

திருச்சிற்றம்பலம்

உமாபதி சிவாசாரியார் அருளிய

# திருவருட்பயன்

விளக்கவுரை.





உரையாசிரியர் :

பேராசிரியன். திருவோத்தூர் வையாபுரி முருகேசன்



வெளியீடு :

மெய்கண்டான் பண்ணை,

திருவத்திபுரம் - 604 407.

மெய்கண்டான் பண்ணை வெளியீடு - 4. 1997.

ஆசிரியர்:- திருவோத்தூர் வையாபுரி முருகேசன்

நூல் கிடைக்குமிடம்:-
*மெய்கண்டான் பண்ணை,*
15 - D 3/1, வள்ளலார் தெரு
நரசிம்ம நகர்,
திருவத்திபுரம் – 604 407.

**விலை : ரூ. 30/-**

அச்சிட்டோர்:
பாரதி ஆப்செட் பிரஸ்,
செய்யாறு.
தொலைபேசி: 22 639.

# முன்னுரை

சைவ சித்தாந்தம் பற்றித் தமிழில் எழுந்துள்ள நூல்கள் பதினான்கு என்பர். அவற்றுள் ஒன்று திருவருட்பயன் என்பது.இந்நூலைப்படைத்தவர்கொற்றவன் குடி உமாபதி சிவாச்சாரியார் ஆவர். அவர் சந்தான குரவர்களில் நான்காமவராக வைத்துச் சொல்லப்பட்டவர்.

சந்தான குரவர்களில் முதலாமவராக வைத்துப் போற்றப்படுபவர் திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்டார் ஆவர். அவர் படைத்த சிவஞான போதம் என்ற நூலே முதல் நூலாக வைத்துப் போற்றப்படுகிறது. இந்நூல் வழி வந்தவையே ஏனைய சித்தாந்த நூல்கள் பலவும் ஆம். ஆனால் திருவியலூர் உய்ய வந்த தேவநாயனார் அருளிய திருவுந்தியாரும், அவர் மாணாக்கர் திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார் அருளிய திருக்களிற்றுப் படியாரும் காலத்தாலன்றியும் பதினான்கன்வரிசையாலும் முன்வைத்துப் பேசப்படுகின்றன. ஆனால் இப் பெரியார்கள் இருவரும் சந்தான குரவர்கள் வரிசையில் ஏனோ அகப்பட்டிலர். அதற்குரிய காரணம் ஆய்வுக்குரியது.

சைவ சாத்திரநூல் வரிசையில் எட்டாவதாக வைத்துச்சொல்லப்படும் திருவருட்பயன் நூல் சைவப் பேரறிஞர் பலராலும் மிக விரும்பிக் கற்கப்படும் நூலாகும். இது குறள் வெண்பாயாப்பினால் அமைந்தது. நூறு குறட்பாக் களையுடையது. தலைப்புக்குப் பத்துக் குறள்களாகப்பத்துத் தலைப்புக்களில் விளங்குவது. திருக்குறளில் வரும் அதிகாரங்களைப் போலவும் அத்தலைப்புக் களைக் கருதலாம். ஆனால் திருக்குறள் போலப் பால் வகுப்பு நூலில் இல்லை.

நூலில் வரும் தலைப்புக்கள் பத்தாவன:-

1. *பதிமுது நிலை*
2. *உயிரவை நிலை*
3. *இருள்மல நிலை*
4. *அருளது நிலை*
5. *அருளுரு நிலை*
6. *அறியும் நெறி*
7. *உயிர் விளக்கம்*
8. *இன்புறுநிலை*
9. *அஞ்செழுத் தருள் நிலை*
10. *அணைந்தோர் தன்மை*

என்பன.

இவற்றுள் முதல் நான்கு அதிகாரங்களைப் பாயிரமாகவோ அன்றிப் பிறப்புப் பாலாகவோ கருதினால் இறுதி ஆறு அதிகாரங்களையும் வீட்டுப்பாலாகக் கருத இடமுண்டு. ஆகவே இந்நூல் பெத்தம் முத்தி ஆகிய இரண்டுநிலைகளும் அமையச் செய்யப்பட்ட ஒரு முழுநூல் என்பதில் தடையொன்றும் இராது.

இந்நூலுக்குப் பலர் உரை எழுதியுள்ளனர் என்று தெரிகிறது. அச்சில் வந்தனவும் வராதனவுமாகிய அவ்வுரை நூல்கள் நூற்றுக்கு மேலும் போகலாம் என்றும் சொல்கின்றனர். என்றாலும் இந்த நூலைக் கற்பவரின் தாகம் அடங்கவில்லை என்று அறிந்ததால் இந்த நூலுக்கு யாம் செய்த விளக்கவுரை நூல் ஒன்றும் இப்பொழுது வெளிவரலாயிற்று. எமது மெய்கண்டான் பண்ணையில் திருவருட்பயன் விளக்கவுரை நூல் நான்காவது வெளியீடாக வருகிறது. சைவப் பேரறிஞர்களின் பேராதரவைப் பெரிதும் விரும்புகின்றேன்.

ஒன்றே முக்கால் அடியில் சிலவாகிய சொற்களைக் கொண்டு ஒரு சித்தாந்தக் கருத்தினை உவமையும் பொருளும் தோன்ற விளக்குதல் என்பது யார்க்கும் அரிதான செயலேயாகும். அத்தகைய திறன் திருக்குறளைப்படைத்த திருவள்ளுவரிடத்தில் சிறப்பாகக் காணப்பட்டது. அவர்க்குப் பிறகு இந்நூலாசிரியராகிய உமாபதி சிவனாரைச் சொல்லலாம்.

"ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்".

இது நீதிநூல்களில் வரும் ஒருவரி உண்மை. இந்த வரியில் நான்கே சொற்கள் இருந்தன. ஆனால் இதில் ஒரு உவமைச் செய்தியும் இருந்தது. உவமேயச் செய்தியும் இருந்தது. உவமைச் செய்தியில் ஈயார் என்பது தேனீக்களைக் குறித்தது. உவமேயச் செய்தியில் அதுவே உலோபிகளைக் குறித்தது. தேனீக்களின் கதி இங்கு உலோபிகளின் கதிக்கு உவமையாக வந்தது. எப்படியென்று பார்க்கலாம்.

தேனீக்கள் உண்ணாமல் உதவாமல் தேடிவைத்த தேனடையைத் தீப்பந்தமுடையார் ஒருநாள் கவர்ந்து செல்வர். இது உவமைச் செய்தி.

உலோபிகள் உண்ணாமல் உதவாமல் தேடிவைத்த பொருட் செல்வத்தைக் கள்வர் முதலான தீயவர்கள் ஒருநாள் கவர்ந்து செல்வர். இது அங்கு மறைந்திருந்த உவமேயச் செய்தி.

இவ்வாறு உவமையும் பொருளும் ஒரு சொல்லில் அமையப்பாடுவதை அணியிலக்கண நூலார் சிலேடை என்பர். சிலேடை ஏன்பது இருபொருள்படப் பாடுவது.

உமாபதி சிவனார் படைத்த திருவருட்பயன் நூலில் இப்படி உவமை முதலான அணிநலன்கள் நிறையவே உள்ளன. எடுத்துக்காட்டாக ஒன்று கூறுவோம்.

உலகில் எல்லாவிடத்தும் எல்லாப் பொருளிடத்தும் இறைவன் உடனாயும் வேறாயும் நிற்கின்றான் என்பது ஒரு சைவ சித்தாந்த உண்மை. "வேறாய் உடன் ஆனான் இடம் வீழிம் மிழலையே" என்பது பிள்ளையார் அருள்வாக்கு, இந்த உண்மையை உமாபதி சிவனார் திருவருட்பயன் நூலில் ஓரிடத்தில் விளக்க வந்தார். அங்கு அவர் அருளிய திருவருட்பா இது.

எங்கும் எவையும் எரியுறுநீர் போலேகம்
தங்குமவன் தானே தனி.

இந்த அருட்பாவில் எரி உறு நீர் என வந்த மூன்று சொற்கள் ஒரு பொருளில் உவமையாக வந்து ஒரு கருத்தையும் வேறு ஒரு பொருளில் உவமையாக வந்து வேறு ஒரு கருத்தையும் விளக்கி நின்றன. எவ்வாறு எனில் கூறுதும்.

உலகில் எல்லாவிடத்தும் எல்லாப் பொருளிடத்தும் நெருப்பிற் சூடு போல உடனாய் நின்ற இறைவன் தானே கொதி நீரின் சூடுபோலப் பிரிந்து வேறாயும் நின்றான் என்ற பொருளையன்றோ அந்த அருட்பா நமக்கு உணர்த்துகிறது. நெருப்பின் சூடு இறைவன் உடனாய் நின்றதற்கும் கொதிநீரின் சூடு அவன் பிரிந்து வேறாய் நின்றதற்கும் எரி உறு நீர் என்பது இரு வழியால் உவமையாயிற்று. நெருப்பின் சூடு நெருப்பை விட்டுப் பிரியாது. கொதிநீரின் சூடு நீரை விட்டுப் பிரிவது. இப்படி ஒரு சொற்றொடர் இரண்டு வழியால் பொருள் தரப்படுவது என்பது எல்லோராலும் முடியாது. ஆசிரியர் உமாபதி சிவனாரிடம் இத்திறன் இயல்பாக அமைந்திருந்தது.

இனி இந்த நூல் கற்பார்க்குப் பொருள் இனிது விளங்கற் பொருட்டு ஒவ்வொரு தலைப்பிலும் பாவால் உணர்த்தப்படும் செய்திகளை உரைநடையில் சுருக்கமாகத் தருகின்றனம். கல்லூரி மாணவர்கள் இந்நூலைத் திறன் ஆய்வு செய்தற்கு அது பெரிதும் பயன்படலாம்.

ஆசிரியர் வழியில் நின்றே நாமும் யானை முகத்துப் பிள்ளையை நினைவு கூர்வோம்.

*காப்புச் செய்யுள்:-*

அழகிய யானை முகத்துப் பிள்ளையை ஒருவர் வழிபடுவாராயின் அவர்க்குக் கலை ஞானம் ஆசிரியர் பால் கற்க வேண்டாமே தானே வந்து நிறையும் என்பது.

*பதிமுது நிலை:-*

பதிப் பொருளாகிய இறைவனது முதன்மை கூறுவது. அது தொன்று தொட்டுப் பேசப்படுதலின் முதுநிலை யாயிற்று.

இறைவன் அகரவுயிர் போல எங்கும் நிறைந்திருக்கிறான்.

குற்றத்தால் ஒதுங்கி உறக்கத்திற் கிடந்த உயிர்களைத் தன்பால் நெருங்கிவரும்படி எந்நேரமும் செய்து கொண்டிருக்கிறான்.

அவன் பெரியதிற் பெரியவன். சிறியதிற் சிறியவன். பேரருள் உடையவன். அவ்வருளை உயிர்களுக்கு எந்நேரமும் வழங்கிக் கொண்டிருக்கின்றான்.

உலகைப் படைக்கின்றவன் அவனே. காக்கின்றவனும் அவனே. அழிக்கின்றவனும் அவனே. என்றாலும் அவன் பிறப்பு இறப்பு இல்லாத பெரியவனே.

அவன் யாராலும் காண்பதற்கரிய அருவத்திருமேனியும் உடையவன். காணாத சிவனடியார் திருவேடத்தில் அவன் உருவத் திருமேனியும் உடையவன். காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்க் கற்பித்துக் கொள்ளப்படும் அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கத்திருமேனியும் உடையவன். இவற்றுக் கெல்லாம் மேலாக ஞானிகளின் அறிவில் அறிவாய் விளங்கும் அறிவுத் திருமேனியும் உடையவன். இப்படியாக இறைவற்கு நான்கு வகைத் திருமேனிகள் உண்டு.

உயிர்கள் பொறிகரணங்களால் ஒன்று ஒன்றாக உணர்வன போல உணராமல் அவன் அனைத்தையும் ஒருகாலத்தொருசேர உணரவல்லவன்.

வானவராலும் அறியப்படாதவன். ஆனால் அடியவரின் அறிவில் அகலாது நின்றவன்.

உலகில் எல்லாவிடத்தும் எல்லாப் பொருளிடத்தும் அவன் நெருப்பிற் சூடுபோல உடனாயும் கொதிநீரிற் சூடுபோல வேறாயும் இருப்பவன்.

அவன் அனைவர்க்கும் தனதருளைச் சமமாகவே வழங்கிக் கொண்டிருக்கிறான். அவனைச் சார்ந்தவர் அவ்வருள் நலத்தைப் பெறுகின்றனர். சாராதவர் இழக்கின்றனர். இது அவர் குறையாமன்றி அவன் குற்றமாகாது. அவன் பேர் சங்கரன் ஆனதால் அவன் வஞ்சனையின்றி இன்பத்தைக் சமமாகவே வழங்குவன்.

[illegible] VIII

[illegible]

இத்தகையோன் உன்னிடத்தும் என்னிடத்தும் அனைவரிடத்தும் உணர்வி உணர்வாய் நீங்காதே நின்றான். நம் அனைவரது பிறவி நோய்க்கும் அவன் மருந்தாயிருப்பவன்.

*உயிரவைநிலை:-*

எண்ணிலவாகிய உயிர்களின் இயல்பு கூறுவது.

பிறந்தனவும் இனிப் பிறக்கவுள்ளனவுமாய உயிர்கள் எண்ணிலடங்கா அவை துறந்தனவும் இனித் துறக்கவுள்ளனவுமாய உயிர்த்தொகைக்குச் சமமே.

உயிர்வருக்கத்தார் முத்திறப்படுவர். ஆணவம் என்னும் ஒரு மலம் உடையா விஞ்ஞானாகலர். ஆணவம் கன்மம் என்னும் இருமலம் உடையார் பிரளயாகலர் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலமும் உடையார் சகலர்.

இந்த முத்திறத்தாரும் மூலமலம் உடையவரே. மாயா மலம் உடைய சகலரை போல ஏனையிருவர் பிறவிக்கு வாரார்.

ஒவ்வொரு நாளும் மாயையால் பெற்ற அறிவுகளை உயிர்கள் ஆணவத்தால் இழந்து உறக்கத்தில் கிடந்து அவத்தையுறுதல் இயல்பே. இது உயிர்களுக்குள்ள பலவீனம்.

மெய் முதலான பொறிகளும் மனம் முதலான கரணங்களும் இல்லையென்றால் உயிர் ஒன்றையும் அறியாது. அப்படியானால் உயிருக்குச் சித்து என்ற பெயர் எவ்வாறு பொருந்தும்?

கண்ணில் தெளிவான பார்வை இல்லை என்றால் ஒளியையோ இருளையோ உலகையோ அறிய முடியாது. அதுபோல உயிர்களுக்கு உண்மையான அறிவு வாய்க்கவில்லை என்றால் இறையையோ மலத்தையோ மாயையையோ உணரமுடியாது. அவற்றைத் தீரவுணர்ந்தாலன்றி உயிர்க்கு உய்தியில்லை.

இறை உல்கை அனுபவியாது. உலகு இறையை அனுபவியாது. உயிரே அவ்விரண்டையும் அனுபவிப்பது.

உயிர் படிகம் போன்றது. படிகம் ஒளியில் ஒளியாயும் இருளில் இருளாயும் தோன்றுவது. அதுபோலவே உயிர்மலத்தில் அழுந்தும் போது மல சொரூபம் பெறும் மாயையில் அழுந்தும் போது தத்துவவன்னரூபம் பெறும். இறையருளில் அழுந்தும் போது அருளுருவம் பெறும்.

**அன்பளிப்பு :**

**தஞ்சாவூர்**

**நடராஜ பிள்ளை உலகநாதன் M.A B T**

கூகைக்குப் பகலும் இரவேயானாற்போலப் பாசவுயிர்களுக்கு ஈசனும் இருளாகவே தோன்றுவன்.

ஆணவ மலத்தில் அழுந்தி உறங்கிக்கிடந்த அந்த நாள் தொட்டு மாயையில் அழுந்திப்பிறந்திறந்து வரும் இந்த நாள் வரை அளவில்லாத துன்பங்களைச் சுமந்து வரும் உயிர் இறையருளைப் பழகிக் கொள்ள வில்லையே. இப்பழக்கம் உயிர்களுக்கு இனி எந்தநாள் வருமோ?

*இருள்மல நிலை:-*

ஆணவ மலத்தின் கொடுமை கூறுவது.

சாத்திர நூல்கள் உயிர்களுக்குப் பிறப்பு வீடு என்று போதிப்பதெல்லாம் பொய்யே, உண்மையான இன்பம் உயிர்களுக்கு உறக்கத்தில்தான் இருந்தது என்று ஆணவ மலம் உயிர்களை மருட்டலாம். ஆனால் அது உண்மையன்று.

ஏகனாய் எண்ணிறந்த சத்திகளை உடையனாய் உயிர் தோறும் விரவிநின்றான் இறைவன் என்று சாத்திர நூல்கள் கூறுவது பொய்யே. ஏகமாய் எண்ணிறந்த சத்திகளையுடையதாய் உயிர் தோறும் விரவிநின்றது ஆணவ மலமே என்று மலம் உயிர்களை மருட்டலாம். அதுவும் உண்மை ஆகாது.

உலகத்துள்ள இருள் தான் சார்ந்த பொருளை மறைக்கும். ஆனால் அது தன்னை மறைக்காது. மலவிருளோ தான் சார்ந்த உயிரையும் மறைப்பது. தன்னையும் மறைப்பது. அதனால் மலவிருள் கொடியது.

மலமானது உயிர்தோன்றிய நாள்தொட்டு உயிரோடு கலந்து இறைவனை எதிர்ப்படாமல் இன்றளவும் உயிரோடு வாழ்கிறது. இது பெத்தகாலம். முத்திக்காலத்தில் உயிர் இறையைச் சந்திக்கும்போது மலந்தானும் நசித்துப் போகலாம்.

மலமாகிய பெண் உயிர்களாகிய ஆடவர் பலரையும் புணர்கின்றபோதே அவர் தம்மையும் மறந்து உறங்கிவிடுவர். அதனால் அவளது மருமவுறுப்பினை அவர் ஒருபோதும் அறிந்ததில்லை. ஆகவே அவளது கற்பு ஒருநாளும் கெட்டதில்லை.

உயிர்களுக்கு மாய்ய ஊட்டிய அறிவுகளை எல்லாம் ஆணவமலம் விரட்டியடித்து அவற்றை மூலாதாரத்தில், இருண்ட இடத்தில் கொண்டு போய் நிறுத்தி உணர்வை இழக்கச் செய்து விடுகிறது. அதனால் மலத்தினும் வலியது ஒன்று இல்லை.

X

மலம் என்பது ஒரு பொருளேயன்றிக் குணம் அன்று. அது உயிர்க்குணமாயின் அதனால் உயிர்க்குத் துன்பம் இராது. அன்றியும் முத்திக் காலத்தில் இறையருளால் மலம் ஆகிய குணம் கெடும் போது உயிராகிய குணியும் கெட்டுப்போகும். அப்படியொரு சித்தாந்தம் இல்லாமையால் மலம் குணம் அன்று. பொருளே தான்.

உயிர் அநாதியே உள்ள பொருள் என்றால் ஆணவ மலமும் அநாதியே உள்ளது தான். அது இடையில் நுழைந்தது என்றால் அவ்வாறு நுழையக் காரணம் இல்லை. பெத்த காலத்தில் உயிர் அறிவை மறைப்பதற்காக அது நுழைந்தது என்று சொன்னால் முத்திக் காலத்திலும் அது நுழையுந்தானே! அவ்வாறாயின் முத்தி நிலை என்று ஒன்று உயிர்களுக்கு இருக்க முடியாது. அதனால் மலம் அநாதியேயுள்ள ஒரு பொருளேதான்.

இரவில் மின்மினிப்பூச்சி போன்ற சிறிய ஒளிப்பொருளாலும் இருள் சிறிது நீங்குவதுண்டு. அதுபோல உயிர்களுக்கு மாயையாலும் மலவிருள் சிறிது கெடுவதுண்டு.

மாயை உயிர்களுக்குத் தனுகரணபுவன போகங்களாயும் கன்மங்களாயும் வந்தடுத்து நின்று பெத்தநிலை கழிகின்றவரை அவற்றுக்குக் கைவிளக்கைப் போல உதவுவதாம்.

*அருளதுநிலை:-*

உயிர்களிடமிருந்த இருள் மலம் நீங்கும் வகை இறைவனிடமிருந்து வரும் அருள் நிலை பேசப்படுகிறது.

உலக நெறியில் உயிர்களுக்குப் பொருள் சிறந்தாற் போல வீட்டு நெறியில் உயிர்களுக்கு அருள் சிறந்தது. அதுவே தலையானது.

உலக நெறியில் பொருளாயும் அதனையீட்டல் முதலான உலக நெறிகளாயும் நின்றது திருவருளே. வீட்டு நெறியில் அருளாயும் அதனைப் பெறுதற்கான தவ நெறிகளாயும் நிற்பதும் திருவருளே.

உடம்பு சடம் ஆதலின் அது ஒன்றையும் அறியாது. உயிர் சித்தேயாயினும் அறிவித்தாலன்றி அதுவும் அறியாது. அவ்வாறாயின் அனைத்தையும் அறிவதும் அறிவிப்பதுமான ஒரே பொருள் திருவருளே.

பாலாழியில் இருந்த ஒரு மீனானது பாலைப்பருகாமல் உறங்கினாற்போல அருளாழியில் வாழும் உயிர்கள் அருளைப் பழகாமல் மயங்குகின்றன,

பொறிகள் தம்மை உணர்த்தும் ஆன்மாவை உணராதாற்போல ஆன்மாவும் தம்மை உணர்த்தும் இறையருளை உணர்வதில்லை. அது அவற்றுக்குப் பெத்த நிலை.

தரைமேல் நடப்பவர் தரையே தமக்காதாரம் என்று நினையாதாற்போல அருளில் வாழ்கின்ற உயிர்கள் அருளை நினைத்துப் பார்ப்பதில்லை. அதுவும் பெத்த காலத்து நிலையே.

மலையில் நின்றவர் மலையை நினைப்பதில்லை மண்ணில் நின்றவர் மண்ணை நினைப்பதில்லை. வானில் நின்றவர் வானை நினைப்பதில்லை. அவர்களைப்போல இறைவனது அருளில் நின்றவர் அருளை நினைப்பதேயில்லை. இவரெல்லாம் தற்கேடரே. தமக்குத் தாமே கேடு சூழ்பவர். இதுவும் பெத்தகாலத்து நிலையே.

வீட்டு நெறிக் கண்சென்று அருளை நினையாமல் உலக நெறிக் கண்நின்று வஞ்சப்புலன் வழியொழுகும் மாந்தர்பலர். வெள்ளத்தில் நின்றே நாவுலர்ந்து வருந்துதலும் விடிந்த பின்னும் இருளிற்கிடந்து புலம்புதலும் அவர்க்கு இயல்பான அனுபவங்களாம். என்றது அவர் மூடரேயன்றிக் குருடருமாயினர் என்பதாம்.

அருளில் வாழ்கின்ற உயிர்கள் அருளைப்புசிக்க விரும்பாமல் உலகைப்புசிக்க விரும்புவது உறியில் பாற்குடத்தின் மேலிருந்தபூனை பாலைப்பருக நினையாமல் அருகில் இறப்பில் ஓடும் காரெலியின் மேல்தாவுவதைப் போன்றது.

ஓரறிவு முதல் ஆறு அறிவுவரை பலகோடி பிறவிகளில் பிறந்து இறந்து வருகின்ற உயிர் இறையருளைச் சிறிதேனும் பழகிக் கொள்ளவில்லையென்றால் இனி அதற்கு வீடும் வேண்டாத ஒன்றே போலும். இவையெல்லாம் பெத்த நிலையே கூறினார் ஆசிரியர்.

*அருளுருநிலை:-*

மேலே விவரிக்கப்பட்ட அருளைப் பக்குவப்பட்ட உயிர்களுக்கு உணர்த்தவரும் இறைவனது குருவடிவமே இங்கு அருளுரு எனப்பட்டது.

உயிர்கள் அறியாவாறு அவர் அறிவில் அறிவாய் நின்று உணர்த்தி வந்த பதிப்பொருளே பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு ஞானத்தை உணர்த்த ஞானாசிரியனாயும் வந்து அவர் உள்ளத்தே தங்குவான்.

உடம்புக்கு வந்த வாதம் முதலான நோயினை உடம்புக்குள்ளிருந்த உயிரே அறிவது. உயிருக்கு வந்த பிறவி நோயினை உயிருக்குள் உயிராயிருந்த முதல்வனே அறிந்து குருவாகிவருவான். அவனைச் சகத்தவருள் ஒருவனாகக் கருதுதல் கூடாது.

அருள்புரியும் நோக்கத்தோடு குருவடிவில் வந்த பதிப்பொருளைப் பக்குவமுடைய ஞானிகளே இறையென அறிவர். உலகோர் அவ்வாறு அறியார்.

ஆணவமலத்தால் இருண்ட சிந்தை உடையவர் இறைவனது அருளுருவும் குருவுருவும் ஒன்றே என உணரார். ஞானிகள் அவ்வாறு உணர்வர்.

வன விலங்குகளைப் பிடித்தற்குப் பழக்கிய பார்வை மிருகங்களைப் போன்றவரே மானுடப் போர்வையில் வந்த ஞானாசிரியர் என்பதைப் புவியில் உள்ளோர் அறியார். ஞானிகள் அவ்வாறு அறிவர்.

பக்குவம் உடைய ஆன்மாக்கள் ஞானாசிரியன் வருகைக்குக் காத்திருப்பர். தமக்கு வேண்டியதைத் தருகின்றவன் எவனோ அவனை ஆசானாகப் பெறுவதே அவர்க்குத் தீர்வாகும்.

கீரியே வந்தாலும் பாம்பின் விடம் நீங்காது. பாவகன் ஒருவனால் அது நீங்குவதாம். அதுபோல ஞானாசிரியன் ஒருவனால் மட்டுமே மல விருள் கெடுவதாம்.

ஒரு மலம் உடையார்க்கு இறைவன் உள்நின்றே ஞானம் உணர்த்துவான். இருமலம் உடையார்க்குத் தேவவடிவிற் குருவாய் வருவான். மும்மலம் உடைய சகலர்க்கு மானுடவடிவிற் குருவாய்வந்து ஞானம் உணர்த்துவான்.

இறைவன் குருவாகி வாராதபோது ஞானத்தைத்தாமே உணரவல்லார் உலகில்யாரும் இல்லை.

சூரியன் இல்லாமல் சூரியகாந்தக் கல்லில் நெருப்புத்தோன்றாது. அது போல ஞானாசிரியன் இல்லாமல் ஒருவனுக்கு ஞானம் உண்டாகாது.

*அறியும் நெறி:-*

ஞானாசிரியனால் உணர்த்தப்படும் ஞானத்தை உணரும் முறைமை கூறுவது.

பக்குவம் உடைய ஆன்மாக்களுக்கு இருவினையொப்பில் குருவருளால் ஞானம் நிகழும். அதுவே சத்தி நிபாதம் என்பது.

இறை உயிர் மலம் கன்மம் அசுத்தமாயை சுத்தமாயை இவை ஆறும் அநாதியே உள்ள பொருள்கள் என்றறிவதும் ஒருவகை ஞானமாம்.

செய்பவன், செய்வினை வினைப்பயன் அதனைச் செய்தவனோடு சேர்ப்பவன் எனப் பொருள் நான்கு என்று உணர்வதும் ஒருவகையில் ஞானமேயாம்.

உடம்பு உயிரால் வாழ்வதைப் போல உயிர் இறைவனால் வாழ்வது என்று அறிவதும் ஞானமே.

படிகம் தன் நிறமும் காட்டும். தான் சார்ந்த பல நிறங்களையும் காட்டும். அதுபோல உயிர்க்குத் தன் வண்ணமும் உண்டு. தான் சார்ந்த பல வண்ணங்களும் உண்டு என்றறிவதும் ஞானமே.

படிகத்தின் நிறங்களை அறியக் கதிரொளி தேவைப்படும். உயிரின் பலவண்ணங்களை அறிய மெய்யறிவு தேவைப்படும் என்று அறிவதும் ஞானமே.

கண் கதிரொளியால் உலகப் பொருள்களைக் கண்டு தெளிவது போல உயிர் இறையருளாலே இறைவனைக் கண்டு தெளியும் என அறிவதும் ஞானமேயாம்.

பெத்த காலத்தில் பொறிகளின் செயலை உயிரின் செயலாக மதித்தது போல முத்திக் காலத்தில் உயிரின் செயலை இறையின் செயலாக மதிக்க வேண்டும் என அறிவதும் ஞான மேயாம்.

உலகை இறையின் வேராய்க் கருதாமல் உலகப் பொருள் ஒன்றையும் சிந்தியாமல் உயிரை நோக்கி ஓடிவரும் இறையருள் வெள்ளத்தில் தோய்ந்திருந்தலாகிய நிட்டையனுபவமும் ஞான நெறியேயாம்.

திருவருளையே நோக்கியிருந்து உலக பாசத்தை மறந்திருந்து ஆட்கொண்டவனிடம் அடங்கி ஆளாயிருத்தலே நிட்டையென்றறிவதும் ஞான நெறியாம்.

*உயிர் விளக்கம்:-*

ஞானத்தைத் தீரவுணர்ந்தவாற்றால் உயிர்க்கு ஒரு வசீகரம் உண்டாம். அது இங்கு உயிர் விளக்கம் எனப்பட்டது.

வெயிலில் விடாய்த்து வந்தவன் நிழலைத் தேடித்தானே இன்புறுவதைப் போலப் பிறவியால் அலுத்து வந்தவன் வீட்டு நெறிக்கண்சென்று தண்ணிழல் இன்பம் பெறுவான். அது உயிர்க்கு விளக்கமாகும்.

பித்தத்தால் நாவிற்குக் கசந்த பால் பித்தம் தெளிந்த பின் தித்திப்பதுபோலப் பேரின்ப அனுபவம் பக்குவத்தில் இன்பமாய்த் தோன்றும். அதனாலும் உயிரிடத்து வசீகரம் உண்டாம்.

முத்திக்காலத்தில் உயிர்விளக்கம் எய்திய ஞானிகள் அந்த விளக்கத்தை ஞானாசிரியனால்பெற்றதென்றே கருதி ஒழுகுவர். அது மேலும உயிர்க்கு விளக்கம் செய்வதாம்.

ஒவ்வொரு உயிரிலும் மலவிருளும் இருந்தது. இறையொளியும் இருந்தது. முத்திக்காலத்தில் குருவருளால் இறையொளி மேலிடும்பொழுது மலவிருள் கெடும் என்று உணரும்போது உயிர்விளக்கம் எய்தும்.

முற்றவம் உடைய ஞானியர்க்கே இறைவன் சொந்தமாகக் கிடைப்பான் என்று உணர்ந்தபோதே உயிரில் விளக்கம் உண்டாம்.

இறைவன் தேடிவைத்த பேரின்ப நிதியை அவன் கொடுக்கப்பெற வேண்டுமே தவிர வஞ்சனையால் கவர நினைத்தால் அது கடை போகாது என்று நினைப்பது உயிர்க்கு விளக்கம் தரும்.

படிகத்தூண் ஒளியைக் கவர்வதால் அதற்கு நிழல் இல்லை. அதுபோல இறைவழியில் நின்று இறையருளை முற்றுமாய்க் கவர்ந்து நின்றால் மலவிருள் கெடும் என்று நினைவார்க்கு உயிர் விளக்கம் பெறும்.

தீக்கொள்ளியைக் கையில் கொண்டு இருள்வழி நடப்பதுபோலச் சிவஞானியர் அருள் பணித்த வழியில் நடப்பராயின் இடர் வராது. அது உயிர்க்குவிளக்கமும் செய்யும்.

சிவஞானியர் முத்திக் காலத்திலும் உலகை இறையருளாலே தான் காண்பர். ஐம்புலனால் காணார். அவ்வாறு காண்பது அவர் உயிர்க்கு விளக்கம் செய்யும்.

வீட்டின்பத்தை இறைவன் தானே தருவான். அதனை அவன் அறியாவாறு வலிதிற் பெறநினைத்தால் அது ஆகாது என்று கருதி இறைபணித்த வழியில் ஒழுகுவது உயிர்க்கு விளக்கம் செய்யும்.

*இன்புறுநிலை:-*

பேரின்பத்தில் திளைத்திருந்தல்.

முன்னால் இருளில் வழிநடந்து இளைத்தவரே பின்னால் ஒளியில் நடந்து இன்புறுவர். அதுபோல உலக நெறியில் வாழ்ந்து வருத்தம் உற்றவரே பிறகு வீட்டுநெறியில் பேரின்ப முறுவர்.

உயிராகிய பெண் பெத்த காலத்தில் மாயையாகிய பெண்ணைப் புணர்ந்த போது இன்பமில்லை. அவளே முத்திக்காலத்தில் இறைவனாகிய ஆண்மகனைப் புணரும் போது மட்டுமே இன்பம் உண்டாம்.

இறைவன் இன்ப வடிவினன் ஆதலால் அவன் அவ்வின்பத்தைத் தன்னை வந்தடையும் ஆன்மாக்களுக்கே தருவன். தான் இன்புறான்.

தாளும் தலையும் ஆகிய இருசொற்கள் புணரும் போது தாடலை என ஒரு சொற்போலப் புணரும். அதுபோல உயிரும் இறையும் கூடும் போது தான் அதுவாய் ஒற்றெனும் படியே கூடும். அதுவே அத்துவிதமாம்.

உயிரும் இறையும் ஒன்றே என்று சொன்னால் அங்குக் கூடல் நிகழவேண்டா. இரண்டே என்றாலும் அவை ஒன்றாய்க் கூட மாட்டா. மலக்குற்றமுடைய உயிர் நின்மலனாகிய இறையுடன் மலம் நகித்துக் கூடும் கூட்டமே அத்துவிதப் புணர்ப்பு ஆகும். அதனை ஏகம் எனலும் கூடாது. துவிதம் எனலும் கூடாது. அத்துவிதம் என்றலே பொருந்துவதாம். (இரண்டற்று ஒன்றானதே அத்துவிதம்)

குருவருளால் ஞானம் உப தேசிக்கப்பட்டவரும் பிறப்பற்றவரே. ஞானம் பெற்று இறைவனைச் சிந்தையில் தேடித தெளிந்தாரும். பிறப்பற்றவரே அன்னார் நிட்டை கூடும் அனுபவம் பெறாமல் மோன நிலையில் வாழ்ந்தாரே யானாலும் அவரும் பிறப்பு அற்றவரே ஆவர்.

பேயினால் பற்றப்பட்ட வரைப் போலப்பித்துக் கொண்டு உலக காரியங்கள் ஒன்றையும் செய்யாதிருத்தலும் பேரின்ப முற்றார் செயலேயாகும்.

கையில் பொருளை வைத்துக் கொண்டு உறங்குபவர் கைப்பொருளை நழுவ விடுவதுபோல அருளைப் பெற்றவர் அருளில் உறங்கும் போது அவ்வருளை ஒருபோதும் நழுவ விடார்.

சிவ ஞானியர் தாமும் இறையுமாக ஒன்றாய்க் கூடி நிட்டையில் இருந்த போது அறிவானும் அறிவும் அறி பொருளுமாகிய மூன்றும் தோன்றாத நிலையே அவர்க்குப் பேரின்பமாம். அதனைச் சொற்களால் சொல்லலரிது.

சிவஞானியர்க்கு நிட்டையில் தோன்றும் இன்பம் ஒருவகை நிரதிசயமான இன்பமேயாம். அவர்க்கு அது இன்பமாய் இருந்தது என்று ஒரோ வழித்தோன்றுமானால் அது சாத்திர நெறியால் வந்த இன்பமாகாது. தோத்திர நெறியில் அன்பால் விளைந்த இன்பமே அதுவாம்.

*அஞ்செழுத்தருள் நிலை:-*

திருவைந்தெழுத்தின் சிறப்புக் கூறுவது.

திரு முறைகளும் வேதங்களும் ஆகமங்களும் திருவைந்தெழுத்தின் பொருளை விளக்கும் நூல்களேயாம்.

திருவைந்தெழுத்தில் மலத்தைக்குறிக்கும் எழுத்தும் மாயையைக்குறிக்கும் எழுத்தும் சிவத்தைக் குறிக்கும் எழுத்தும் சிவனருளைக் குறிக்கும் எழுத்தும் உயிரைக் குறிக்கும் எழுத்தும் முறையே நிற்பன. அவ்வாறு உச்சரிப்பது ஒரு விதி முறை. அது ந–ம–சி–வா–ய என்பது.

வீட்டைக் குறிக்கும் பதியெழுத்துக்கள் ஒருபக்கம் நிற்கப்பிறப்பைக் குறிக்கும் மலவெழுத்துக்கள் மற்றொரு பக்கத்தே நிற்க நடுவில் உயிரைக் குறிக்கும் எழுத்து நிற்க உச்சரிப்பதும் ஒருசார் விதிமுறையாம் என்க, அது சிவா–ய–நம என்பது.

சிவாயநம என்பது விரியுங்கால் சிவா யநம எனவும் சிவாய நம எனவும் விரியலாம். சிவா யநம என உச்சரிக்க நேர்ந்தால் உயிரைப் பாசங்கள் பிறப்பில் ஆழ்த்தலாம். உயிர் வினையிலிருந்து மீள வேண்டுமாயின் சிவாய நம என்று தொனிக்கும் வகை உச்சரித்தல் கடனாம்.

சிவத்தை முன்னாக வைத்துச் சிவாய நம என்று ஓதாமல் பாசவெழுத்துக்களை முன்னாக வைத்து நமசிவாய என்று ஓதின் பிறவி நீங்குமோ—நீங்காது என்றவாறாம்.

சிவமே அனைத்திற்கும் ஆதாரம் ஆதலால் அதனையே முன்வைத்து அதனோடு உயிர் சேர உச்சரித்துவருக, அவ்வாறு உச்சரித்தால் உயிர் பாசத்தைப்பற்றாது. அது சிவாய நம என்பது.

சிவத்தை முன்னாக வைத்து ஓதினால் மட்டுமே பவம் தீரும். அதுவே நீ ஓதும் படியாம். அது சிவாய நம என்பது.

உயிரைக் குறிப்பதான யவ்வெழுத்து வா வுக்கும் நவ்வுக்கும் இடையே நிற்க உச்சரிக்காமல் வாவுக்கும் சிக்கும்இடையே நிற்க உச்சரித்தலும் ஒருவழக்கு உண்டு. அது ஞானாசிரியனின் உபதேசத்திற்குப் பிறகே ஏற்க வேண்டும் என்பது. அது சிவாய சிவாய சிவாய என்பது.

சிவாய நம என்று உச்சரிக்கும் போது ய என்பது வாவுக்கும் நவ்வுக்கும் இடையே நிற்கும் அவ்வாறு உச்சரிப்பதை விடுத்துச் சிவாய சிவாய சிவாய என்று உச்சரிக்கும்போது ய வா சி யிடைநிற்கும் என அறிக.

அத்து வித நெறியில் உறைத்து நின்ற சிவ ஞானியானவன் மேற் கூறிய எல்லாவகையானும் உச்சரித்து வருவான். அவற்குக் கட்டுப்பாடு ஏதும் இல்லை என்க,

*அணைந்தோர் தன்மை:-*

இறைவனது திருவருளில் தோய்ந்து நின்ற சீவன் முத்தரது இயல்பினைக் கூறுவது.

சிவஞானியர் தம்மைத் திருவருளில் முற்றுமாய் ஒடுங்கப்பண்ணி இன்பம் உள்ளத்தில் ஒடுங்குமாறு நிட்டையில் தூங்கிக் கொண்டிருப்பர். அதுவே அவர்க்கு நிரதிசயமான இன்பமாம்.

சிவஞானியர் இறைவன் செய்யும் ஐந்தொழில்களையும் ஏனை அயன்மால் முதலானோர் செய்யும் தொழில்களையும் இந்திரன் முதலானோர் தொழில்களையும் அறவே தாம் செய்ய விரும்பார்.

எல்லாவற்றையும் அறியக் கூடிய வியாபக அறிவு சிவ ஞானியர்க்கு இப்பொழுது உண்டு என்றாலும் அவர் இறைவன் ஒருவனைத் தவிர வேறு ஒன்றையும் சிந்தியார்.

ஆமை போலப்புலன்கள் ஐந்தையும் ஒருசேர அடக்கி நிட்டையில் ஒடுங்கிய சிவஞானியர் உலகிற்கு ஒருபோதும் திரும்பார்.

சிவஞானி நின்றவிடமெல்லாம் சிவன் நின்ற இடமேயாம். சிவனைத் தவிர்த்துச் சிவஞானி தனித்து இருக்கமாட்டான்.

சிவஞானியர் நிட்டையில் தூங்கினாலும் உலகில் உலாவித்திரிந்தாலும் பதிப் –பொருளை ஒருதன்மையாகவே கண்டு நிற்பர். இகழ்ச்சி என்பது அவர்க்கில்லை.

சரியை முதல் மூன்று தவங்கட்குப் பயன் சரயோகம் முதலியனவாம். ஞானமாகிய தவத்திற்குப் பயன் வீடுபேறாம் என்பது.

சிவஞானியர்க்கு வினைப்பற்றுச் சிறிதும் இல்லை. கொண்டு வந்த வினை உடம்போடு கழியும். செய்யும் வினையோ இல்லை. இருந்தால் அதனை அருளே சுட்டெரிக்கும்.

சிவஞானியர்க்கு மனம் மொழி மெய்யால் வரும் மூவகை வினைகளும் இல்லை. அதனால் மறுமைப் பயனையும் அவர் இம்மையில் தானே அனுபவிப்பர்.

பதிப் பொருளது கருணை வெள்ளத்தில் திளைத்தவாறே சிவஞானியர் வஞ்சப்புலன் வழியொழுகும் மாந்தர்தம் துயர் துடைப்பான் வேண்டி மாலற நேயம் மலிந்தவர் வேடத்தையும் ஆலயந்தன்னையும் அரன் எனவே கண்டு வழிபடற் பொருட்டு ஊர் ஊர்தோறும் அலைந்து திரிவர், நாயன்மார்கள் நால்வரைப் போல என்பதாம்.

இங்கு இதுகாறும் நூலில் கூறப்பட்ட செய்திகள் அனைத்தையும் சுருங்கச் கூறினம். இதனால் நூல் கற்பார்க்குப் பொருள் சிறந்து விளங்கலாம்.

இனி இந்த நூலைப் பிழையின்றி அச்சிட்டு உதவிய பாரதி அச்சக உரிமையாளர் திரு. K.N. பாலகிருஷ்ணன் அவர்களுக்கும் அச்சக ஊழியர்கள் அனைவருக்கும் எனது நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முயற்சிக்கு உறுதுணையாயிருந்த திருவருளை வாழ்த்தி வழிபடுகின்றேன்.

திருவோத்தூர்.வையாபுரி முருகேசன்.

---

திருச்சிற்றம்பலம்

உமாபதி சிவாசாரியார் அருளிய

# திருவருட்பயன்

## *விளக்கவுரை.*

காப்பு

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலை ஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

இது யானை முகத்துப் பிள்ளையை வணங்கிற் கலை ஞானம் தானே வரும் என்கிறது.

கண்ணழிவு:- நல்ல குஞ்சரக்கன்றினை நண்ணின் கலை ஞானம் கற்கும் சரக்கு அன்று காண், என்பது.

பொழிப்புரை:- அழகிய யானை முகத்துப் பிள்ளையை ஒருவர் வழிபடின் அவர்க்குக் கலையறிவு ஆசிரியர்பால் கற்க வேண்டாமே தானே வரும் என்றவாறு.

இது நூலுக்குக் காப்புச் செய்யுள். வெண்பா யாப்பினால் அமைந்தது.

ஆசிரியர் தாம் செய்யப்புகும் நூல் இனிது முடிய நூல் முதற்கண் யானை முகத்துப் பிள்ளையை நினைவு கூர்ந்தது இது.

நண்ணுதல் - அடிசேர்தல். எனவே அது வழிபடுதலைக் குறித்தது

கலைஞானம் கற்கும் சரக்கு அன்று என்றதால் அது இப்பிள்ளையின் அருளால் தானே வந்துசேரும் என்பதாயிற்று.

காண் - முன்னிலையசைச் சொல். மாணாக்கனைச் சுட்டியது எனலுமாம்.

# நூல்

## 1. பதி முது நிலை.

அஃதாவது பதிப் பொருளது முதன்மை கூறுவது. அது முப்பொருள்களில் ஒன்றாக வைத்து எண்ணப் படினும் அதுவே ஏனையிரண்டிற்கும் முதற்பொருள் என்பதும் அதனால் அதுவே அனைத்திற்கும் முதுமையுடையது என்பதும் உணர்த்துவது.

1. அகர வுயிர்போ லறிவாகி யெங்கும்
நிகரிலிறை நிற்கும் நிறைந்து.

இது பதிப் பொருளது சருவ வியாபகம் கூறுகின்றது.

கண்ணழிவு:- நிகர் இல் இறை அகர வுயிர் போல் அறிவாகி உலகில் எங்கும் நிறைந்து நிற்கும் என்பது.

பொழிப்புரை:- தனக்கு ஒப்பொன்றும் இல்லாத பதிப்பொருளாகிய இறைவன் அகரமாகிய உயிரெழுத்தைப்போல அறிவு வடிவாய் நின்று உலகில் உயிர்ப் பொருள் உயிரல் பொருள் ஆகிய அனைத்தினும் நீக்கமறக் கலந்து நிற்பனாம் என்றவாறு

ஒருவனேயாகிய இறைவன் உலகினைக் கடந்து நின்றவன். ஆதலால் உலகத்துப் பொருள் ஒன்றும் அவனுக்கு ஒப்பாகமாட்டாது.

அகரவுயிர் வாய் அங்காத்த அளவில் இயல்பாக எழுந்த ஒலிவடிவம் உடையது. அதனால் இது ஏனை உயிரொலிகளில் எல்லாம் கலந்திருப்பது. அதுபோல இறைவன் இயற்கை அறிவினன். அறிவே வடிவாயிருப்பவன். அதனால் உயிர்ப்பொருள் அனைத்தினும் அறிவுக்குள் அறிவாய்க் கலந்திருப்பவன்.

அகரவொலி மெய்யொலிகளை உயிர்ப்பிக்க உதவுகிறது. அதுபோல இறைவன் உலகு தழைக்க உதவுகின்றான். இக்காரணங்களால் இறைவனுக்கு அகரவுயிர் உவமையாயிற்று.

அறிவே இறைவற்கு வடிவம் என்றதால் வேதாகம புராண இதிகாசங்களில் அவற்குக் கூறப்படும் வேறுவடிவங்கள் உபசாரமாம் என்பதும் உண்மையாகா வென்பதும் பெறப்பட்டன.

அகரவுயிர்போல் என்றதால் பதியே முதற்பொருள் என்பதும், அது ஏனைப் பசு பாசங்களில் நீக்கமின்றிக் கலந்திருந்தது என்பதும் பெறப்பட்டன. முதன்மையும் நீக்கமறக் கலந்து நின்ற தன்மையும் சிவஞான போதத்து முதலிரு சூத்திரங்களால் உணர்த்தப்பட்ட கருத்துக்களாம்.

அகரவுயிர்:- அகரமாகிய உயிரெழுத்து - இருபெயரொட்டுப் பண்புத்தொகை.அகரவுயிர்போல் இறை நிற்கும் என்றது உவமையணி. எங்கும் என்பதில் உள்ள உம்மை எஞ்சாப் பொருட்டு

2 தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி
பின்னமிலா னெங்கள் பிரான்.

இது உயிர்களுக்குப் பதியின் உபகாரம் உணர்த்துகிறது.

கண்ணழிவு:- சத்தியொடு பின்னமிலான் ஆகிய எங்கள் பிரான் மன்னுயிர்கள் தன் நிலைமை சாரத்தரும் என்பது

பொழிப்புரை:- அருளோடு பிரிவின்றி நின்றவனாகிய எம்பெருமான் மலத்தோடு மன்னிய உயிர்கள் எல்லாம் அம்மலத்திலிருந்து விடுபட்டுத் தன்னருளில் வந்து சாரும்படித் தன் ஆணையால் செய்து கொண்டிருக்கின்றான் என்றவாறு.

அருளிற் பின்னமிலான் என்றது அருளே அவன், அவனே அருள் என்றதாம். இவ்வாறு

"அருளுண்டாம் ஈசற் கதுசத்தி யன்றே
அருளும் அவனன்றில்லை அருளின்
றவனன்றே இல்லை"
என்று முதல் நூலாரும் கூறியுள்ளார்.

தன் நிலைமை மன்னுயிர்கள் சாரத் தருதலாவது,

அநாதியில் ஆன்மாக்கள் சகசமலமாகிய ஆணவ மலத்தால் மறைக்கப்பட்டு அறிவை இழந்து சடம்பேலவே கிடந்தன. அப்பொழுது அவற்றுக்கு உடம்பில்லை, உலகமில்லை, வாழ்வுமில்லை. அதுவே ஆன்மாக்களுக்கு அநாதி கேவல நிலை என்பது

அவற்றுக்கு வாழ்வளிக்க இறைவன் தனது அருட்கூறுகளில் ஒன்றாகிய மாயையைப் புணர்த்தினான். ஆகந்துக மலமாகிய மாயை ஆன்மாக்களை வந்தடுத்தபோது அவற்றுக்கு உடம்பாயும் உலகாயும் வந்து ஒட்டியது. அதன் விளைவால் ஆன்மாக்கள் ஆணவ மலத்திலிருந்து சற்றே விடுபட்டு உடம்புகூடி உலகில் பிறக்கத் தொடங்கின. முதலில் புல்லும் மரமும் முதலான ஓரறிவு உயிர்களாகப் பிறந்தன. தொடர்ந்து படிப்படியாக இரண்டறிவு மூன்றறிவு நான்கறிவு ஐந்தறிவு ஆகிய உயிர் வருக்கங்களில் பிறந்து வந்து முடிவில் புலனறிவுகள் ஐந்தனோடு மனஅறிவும் வாய்க்கப்பெற்ற மானுடப் பிறவியை அவ்வான்மாக்கள் அடைந்தன. இருள் மலமாகிய ஆணவத்திற்கு எதிராக ஒளிமலமாக வந்தடுத்த மாயையின் உதவியால் ஆன்மாக்கள் இத்துணை அறிவு வளர்ச்சியும் வாழ்வும் பெற்றன. ஆன்மாக்கள் ஓரறிவுயிர்களாக முதலில் பிறந்தபோதே அவற்றுக்குக் கன்மமலமும் கூடிவிட்டது. அதனால் கேவல நிலையிலிருந்து சகல நிலைக்கும் அவை வந்துவிட்டன.

சகல நிலையில் மானுடப் பிறவியில் ஆறு அறிவுகளோடும் வாழ்ந்துவந்த ஆன்மாக்களுக்கு மாயை முப்பத்தொரு வகையான தத்துவ வுணர்வுகளையும் ஊட்டியது. அவை நிலம் முதலான ஆன்மதத்துவ உணர்வுகள் இருபத்து நான்கும் கலை முதலான வித்தியாதத்துவ உணர்வுகள் ஏழுமாம். இந்த அறிவுகளையும் கொண்டு ஆன்மாக்கள் உலக பாசத்தில் மிகவும் மூழ்கி, உலகையே உணர்ந்து, உலகையே சார்ந்து, உலகையே புசித்து வந்தன. இந்த வழியாக ஆன்மாக்கள் பகலில் உண்பதும் இரவில் உறங்குவதுமாகக் காலத்தைப் போக்கிவந்தன. இங்கு அவை பழவினைப் பயன்களைப் புசிப்பதும், புசிக்கின்ற வழியாலே புதுவினைகளை யீட்டுவதும் அவ்வினை காரணமாக உலகில் உடம்புமாறிப் பிறப்பதும் இறப்பதுமாகவே காலம் போக்கின.

இங்கு ஆன்மாக்களின் வாழ்வு உலகத்தோடு நின்றுவிட்டதை யுணர்ந்த முதல்வன் அவற்றுக்கு மேலும் ஒரு புதிய வாழ்வளிக்க எண்ணினான். மாயையால் பெற்றிருந்த கலை முதலான தத்துவ உணர்வுகளைக் கொண்டே

ஆன்மாக்களுக்குத் தெய்வம் என்பதோர் சிந்தை உண்டாகப் பண்ணினான் இறைவன். தெய்வ சிந்தனை ஆன்மாக்களுக்கு வாய்த்ததும் அவை நல்வினைகளை மிகுதியாகச் செய்து பழகின. சரியை கிரியை யோகம் ஆகிய நற்றவங்களையும் செய்தன. அந்த நற்றவப் பயனால் அவை அடுத்துவரும் ஒரு பிறவியில் நல்ல குடியில் வந்து பிறந்து இருவினையொப்பு என்னும் சமனிலை உணர்வும் வாய்க்கப் பெற்றன. ஆன்மாக்களின் அந்தப் பக்குவ நிலையினை உணர்ந்த முதல்வன் அவற்றுக்குக் குருவாயும் வந்து ஞானத்தை உணர்த்தினான். ஞானத்தை உணர்ந்த ஆன்மாக்கள் உலகபாசத்தை அறவே முறித்துக்கொண்டு இறைவன் கழலை உறுதியாகப் பற்றி நின்று ஞான வாழ்வில் ஈடுபட்டன.

இது ஆன்மாக்கள் வாழ்வில் மூன்றாவது நிலையாம். இதுவே சுத்தநிலை எனப்பட்டது. இந்த நிலையில் ஆன்மாக்கள் இறைவனைச் சிந்தையில் கண்டு இன்புற்றன. இந்த இன்பம் மாறாதிருக்கத் திருவைந்தெழுத்தை விதிப்படிக் கணித்தன. தான்வேறு இறைவன் வேறு என்று எண்ணாமல் இறைவனே தான் என எண்ணின. இப்படியாக இறைவனோடு ஏகனாகி இறைபணியில் வாழ்ந்து மலம்மாயை கன்மங்களைப் போக்கிக் கொண்டு உடம்பு விழுகின்றபோது இறையருளிலேயே கலந்து பிறவியை அறுத்துக் கொண்டன. இதுவே ஆன்மாக்களுக்கு வீடுபேறு எனப்பட்டது.

இப்படியாக ஆணவத்தில் மூழ்கியிருந்த ஆன்மாக்களை உலகில் மூழ்க வைத்ததும், உலகில் மூழ்கியிருந்த அவற்றுக்குத் தெய்வ சிந்தனையை ஊட்டி இறையருளில் மூழ்க வைத்து ஆட்கொண்டதும் இறைவனே ஆதலால் "தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத்தரும்" என்றார் ஆசிரியர். உயிர்களைக் கடைத்தேற்றுவதான இந்தக் காரியங்களைத்தான் அருளிற் பிரிவின்றி அருளே உருவாயிருந்த முதல்வன் எந்த நேரமும் தனது அருளாணையாலே செய்து கொண்டிருக்கின்றான் என்று இந்த அருட்பா உணர்த்தியது.

இங்கு மன்னுயிர்கள் என்றது ஆணவ மலத்தில் நிலைகொண்டிருந்த உயிர்கள் என்றதாம்.

ஆணவத்தில் குளித்து உறங்கிக்கிடந்த உயிர்களை மாயையில் குளிக்கவிட்டு, உலகவின்பங்களை புசிக்கவைத்து முடிவில் இறையருளில் குளிக்க வைத்ததுதான் இங்கு இறையின் செயல் என்று நாம் இந்த அருட்பாவால் உணர்கிறோம்.

3. பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றி
னருமைக்கும் ஒப்பின்மை யான்.

இது பதிப்பொருள் ஒன்றானும் உவமிக்கவியலாதது என்கின்றது.

கண்ணழிவு:- இறைவனது பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும், அவனால் உயிர்கள் பெறும் பேற்றின் அருமைக்கும் ஒப்பு இன்மையான் அவனுக்கும் ஒப்பு இல்லை என்றது.

பொழிப்புரை:- இறைவனது பெருமை முதலான குணங்கட்கு ஒப்பு இல்லாமையால் அவனுக்கும் ஒப்பு இல்லை என்றவாறாம். இறைவன் பெரியதிற் பெரிதாய தோற்றமுடையவன். சிறியதிற் சிறிதாயும் இருப்பவன். அளவிறந்த அருளையுடையவன் அவ்வருளால் உயிர்களுக்கு அரிதாகிய வீடுபேற்றையும் நல்குபவன். இவற்றுக்கெல்லாம் உவமை சொல்லமுடியாது. அதனால் அவனுக்கும் உவமை இல்லை என்பதே இந்த அருட்பாவால் கூறப்பட்டது.

இறைவனுக்கு ஒப்பான பொருள் உலகில் இல்லை என்பது இந்தப்பாட்டில் சொல்லெச்சமாயிருந்தது.

4. ஆக்கி யெவையு மளித்தா சுடனடங்கப்
போக்குமவன் போகாப் புகல்

இது படைத்துக் காத்து அழிக்கின்ற அவனே அனைத்திற்கும் புகலிடம் என்கின்றது.

கண்ணழிவு:- உயிர் உலகு ஆகிய எவையும் ஆக்கி அளித்து அவற்றின் ஆசு உடனடங்கப் போக்கும் அவனே அவற்றுக்குப் போகாப்புகல் என்பது.

பொழிப்புரை:- உலகு உயிர் அனைத்தையும் படைத்துக் காத்து அழிக்கின்றவன் எவனோ அவனே அவற்றுக்குப் புகலிடமாயும் இருக்கின்றான் என்றவாறு.

அழித்தல் - ஒடுக்குதல் ஒடுக்கும்போது அவற்றின் குற்றங்களோடு ஒருசேர ஒடுக்குவான் என்று சொல்லப்பட்டது.

அவனே புகலிடம் என்றதால் ஒடுக்கியவற்றை மீண்டும் படைத்து அவற்றுக்குப் புனர் வாழ்வளிப்பவனும் அவனே என்பது கருத்து.

எனவே ஒடுக்குங்கால் அவற்றை அவற்றின் குற்றங்களோடு ஒருசேரவொடுக்கித் தோற்றுவிக்குங்கால் அக்குற்றங்கள் குறையும் வகை தோற்றுவிப்பான் என்பது அதற்குப் பொருளாம்.

உயிர்களின் குற்றங்களைக் குறைப்பதற்கும் அறிவைப் பெருக்குவதற்குமாகவே இறைவன் அவற்றுக்குப் பிறப்பு இறப்புக்களைக் கொடுக்கின்றான் என்றே இங்கு நாம் உணரவேண்டும்.

அதனாலன்றோ புல்லில் தொடங்கிப் பிறந்து இறந்துவந்த உயிர்கள் மானுடப் பிறவியை அடைகின்றபோது அவற்றின் குற்றங்கள் குறைந்து அறிவு சிறந்து விளங்குவதை நாம் காண முடிகின்றது. இந்த ஒரு பரிசு உயிர்களுக்கு இறைவனால் கிடைப்பதே.

இனிப்போகாப்புகல் என்பதற்கு அவன்வேறு ஒருவரைப் புகல்தேடிப் போகாதவன் என்றும் பொருள் உரைக்கலாம். அந்தப் பொருளால் உலகு உயிர்கள் தாம் பிறப்பு இறப்புக்கு உரியனவேயன்றி இறைவன் பிறப்பிறப்பில்லாப் பெரியோன் என்றும் உணரலாம்.

5. அருவு முருவு மறிஞர்க் கறிவா
முருவு முடையா னுளன்

இது பதிப்பொருளாகிய இறைவற்கு உருவம் நான்கு என்கின்றது.

கண்ணழிவு:- அருவும் உருவும் அருவுருவும் அறிஞர்க்கு அறிவாம் உருவும் ஆகிய நான்கும் உடையான் ஒருவன் உளன். அவனே பதிப்பொருளாகிய இறைவன் என்பது.

பொழிப்புரை:- அருவத் திருமேனியும், உருவத் திருமேனியும், அருவுருவத்திருமேனியும் ஞானிகள் தம் அறிவில் கண்டு தெளியும் அறிவுத் திருமேனியும் ஆகிய நான்கு திருமேனிகளையும் உடையவன் ஒருவன் உளன். அவனே பதிப்பொருளாகிய இறைவன் என்றவாறு.

இத்ததிருமேனிகள் நான்கும் வடமொழி ஆகமங்களாலும் தமிழ்த் திருமுறைகளாலும் அறியப்பட்டன.

இறைவனது அருவத் திருமேனி யாராலும் காண்டற்கரியது. உருவத்

திருமேனி சிவனடியார் திருவேடம். அருவுருவத் திருமேனி ஒன்றும் உண்டால். அதுவே சிவாலயத்தில் விளங்கும் சிவலிங்கத் திருமேனியாம். இம் மூன்றையும் தவிர்த்துச் சிவஞானிகள் தம் சிந்தையில் காணும் ஞான சொரூபமே அவனது அறிவுத் திருமேனி என்று உணரல் வேண்டும்.

"அறியும் அறிவே சிவமும் ஆம்" என்று மெய் கண்டார் கூறியது அந்த அறிவுத் திருமேனியையே என்று உணர்க.

எனவே பதிப்பொருளாகிய இறைவனைச் சிவாலயத்திலும் சிவனடியார் திருவேடத்திலும், சிவஞானிகள் சிந்தையிலுமே அறியமுடியும் என்பது இதன் கருத்து.

இறைவனது அருவத் திருமேனி யாராலும் அறியவொண்ணாதது என்பதை, "அகளமாய் யாரும் அறிவரிது அப்பொருள் - சகளமாய் வந்ததென்று உந்தீபற" எனவரும் திருவியலூர் உய்யவந்த தேவநாயனார் திருவாக்கால் உணர்க.

சத்துப் பொருட்கு அளவை கூறுங்கால் ஆசிரியர் மெய்கண்டார் அறியப்படும் சுட்டெல்லாம் அசத்தே என்றும் அறிவால் அறியப்படாத ஒன்று முயற்கோடு போல்வதான சூனியமே என்றும் பிறிதொன்றே சத்துப் பொருளாகிய பதி என்றும் கூறினார். எனவே சத்துப்பொருள் என்பது உலகறிவால் அறியப்படாததாயினும் இறையறிவால் ஒருதலையாக அறியப்படுவது என்று தெரிந்தது. தெரியவே அறிவறியாப் பொய்ப்பொருள் முயற்கோடு போல்வதான சூனியமே என்பதும் அறிவறியா மெய்ப்பொருளே சத்தாயுள்ள சிவனருளாம் என்பதும் மெய்கண்டார் துணிபாக இருந்தது. அந்தச் சத்துப்பொருள் சிவஞானிகளின் அறிவுக்கு வேறாய்த் தோன்றாது. அறிவில் அறிவாயே தோன்றும் என்பது அனுபவ சித்தாந்தமாயிற்று. ஆகவே இறைவற்கு உருவம் அங்குச் சிவஞானிகளின் அறிவே என்பது தெளியப்பட்டது. அதைத்தான் இங்கு இந்நூலாசிரியர் "அறிஞர்க்கு அறிவாம் உரு" என்றார்.

இறைவனது அறிவுத் திருமேனியைத்தான் "ஞான சொரூபம்" என்றார் மெய்கண்டார். இதையே இங்கு உமாபதியார் "அறிஞர்க்கு அறிவாம் உருவம்" என்றார்.

6. பல்லா ருயிருணரும் பான்மையென மேலொருவ
னில்லாதா னெங்க ளிறை

இது உயிர்களைப் போலவன்றி இறைவன் தானே ஒருங்குணர்வான் என்கின்றது.

கண்ணழிவு: எங்கள் இறை தனக்குமேல் ஒருவன் இல்லாதான் ஆதலின் பல் ஆர் உயிர் உணரும் பான்மை என உணரானாய் எல்லாம் தானே ஒருங்கு உணர்வான் என்பது.

பொழிப்புரை: நங்கள் இறைவனானவன் தன்னை உணர்த்தத் தனக்குமேல் ஒருவன் இல்லாதான். ஆகையாலே பலவாய் நிறைந்த உயிர்கள் உணர்வன போலவன்றி எல்லாவற்றையும் தானே ஒருங்கு உணரவல்லவன் என்றவாறு.

இறைவன் ஆன்மாவை உணர்த்த, ஆன்மாப் பொறிகளை உணர்த்தப் பொறிகள்தாம் ஒன்று ஒன்றாக உணர்ந்த விடயங்களை ஆன்மாவும் ஒன்று ஒன்றாகவே உணரும். இது ஆன்மாவின் உணரியல்பு. இறைவன் உணர்வது அவ்வாறு அன்று. அவனுக்கு உயிர்களுக்கு இருப்பன போன்று உடம்பு பொறிகரணங்கள் இல்லை. உயிர்களைப் போன்று தனக்குமேல் ஒருவனுமில்லை. ஆதலின் அவன் உணருங்கால் எல்லாவற்றையும் தானே ஒருங்கு உணரும் வல்லமையுடையவன் என்றதாம்.

ஆதலின் அவன் எல்லாவற்றையும் தானே ஒருங்கு உணர்வான் என்பது இப்பாடலின் சொல்லெச்சம்.

உயிர்கள் பலவாய் எங்கும் நிறைந்திருத்தலின் "பல்லாருயிர்" எனப்பட்டது.

இதனால் இறையும் உயிரும் ஒரு சாதியல்லவென்பதும் உணர்த்தப்பட்டது.

உயிர் மும்மலம் உடையது, இறைவன் நின்மலன்
உயிர் முக்குண முடையது, இறைவன் நிர்க்குணன்
உயிர் சுதந்தர மற்றது, இறைவன் சருவ சுதந்தரன்

இந்த வேற்றுமைகளையும், இங்குக் கூட்டியுணர்க.

7. ஆனா வறிவா யகலா னடியவர்க்கு
வானாடர் காணாத மன்.

இது இறைவன் அடியவர் அறிவை விட்டகலான் என்கின்றது.

கண்ணழிவு: வானாடர் கானாத மன் அடியவர்க்கு ஆனா அறிவாய் அகலான் என்பது.

பொழிப்புரை: வானவராலும் அறியவொண்ணாத இறைவன் ஞானிகளின் அறிவில் நீங்கானாய் நிற்பான் என்றவாறு.

ஞானிகள் அவனை அன்றி வேறு ஒன்றையும் நினையார் ஆகலின் அவர் அறிவில் இறைவன் ஒரு கணமும் நீங்காதிருப்பன் என்றதாம்.

8. எங்கு மெவையு மெரியுறுநீர் போலேகந்
தங்குமவன் தானே தனி.

இது இறைவன் உலகில் உடனாயும் வேறாயும் நிற்கும் நிலைமை கூறுகின்றது.

கண்ணழிவு:- எங்கும் எவையும் எரிஉறு நீர்போல ஏகம்-ஏகமாய் தங்கும் அவன் தானே தனி-பிரிந்து தனியாயும் இருப்பன் என்பது.

பொழிப்புரை:- உலகில் எல்லாவிடத்தும் எல்லாப் பொருளிடத்தும் நெருப்பில் சூடுபோலப் பிரிவின்றிக் கலந்து நிற்கும். அவன் தானே எரிக்கப்பட்ட கொதிநீரின் சூடுபோலப் பிரிந்து வேறாயும் நிற்பனாம் என்றவாறு.

எரிஉறுநீர் என்றது நெருப்பில் உள்ள சூடுபோலக் கலந்து உடனாய் நிற்றற்கும், எரிக்கப்பட்ட கொதிநீரில் உள்ள சூடுபோலப் பிரிந்து வேறாதற்கும் உவமையாய் வந்தது.

கலந்து உடனாய் நிற்றற்கு உவமையாங்கால் நீர்-நீர்மை-தன்மை-சூடு எனவும், பிரிந்து வேறாதற்கு உவமையாங்கால் நீர்-கொதிநீர்-கொதிநீரிற் சூடு எனவும் பொருள் காண்க.

"வேறாய் உடன் ஆனான் இடம் வீழிம்மிழலையே" எனவரும் பிள்ளையார் அருள்வாக்கினை இங்கு உணர்க.

இங்கு உரை காணவந்தார் பலரும் எரியுறு நீர் என்பதற்குக் கொதிநீரின் சூடு ஒன்றே கொண்டனர். அது பிரிந்து வேறாதற்கு உவமையாமன்றிக் கலந்து உடனாதற்கு உவமையாகாதென வுணர்க. கலந்து உடனாதற்கும் உவமைதோன்ற நெருப்பிற் சூடுபோல எனவும் உரை காண வேண்டும். அவர் அது கண்டிலர். எரியுறுநீர் என்பது சிலேடைப் பொருள் தந்தது. நெருப்பின் சூடுபோல எனவும், கொதிநீரின் சூடுபோல எனவும் இருபொருள் பயந்தது.

9. நலமில னண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்
சலமிலன் பேர்சங் கரன்

இது இறைவன் சார்ந்தார்க்கு நல்லனாயும் சாராதார்க்கு அல்லனாயும் இருந்தான் என்றாலும் அவன் சலமிலன் என்கின்றது.

கண்ணழிவு:- இறைவன் நண்ணினர்க்கு நல்லனாயும் நண்ணார்க்கு நலமிலனாயும் இருந்தான் என்றாலும் அவன் சலமிலன் எவ்வாறெனில் அவன்பேர் சங்கரன் ஆகையினாலே என்பது.

பொழிப்புரை:- இறைவன் தன்னைச் சார்ந்தார்க்கு நல்லனாயும் சாராதார்க்கு அல்லனாயும் இருந்தான் என்றாலும் அவன் வஞ்சனை இல்லாதவனே. எவ்வாறு எனில், அவன் சங்கரன் என்ற பெயரை உடையவன். ஆதலால் அவன் எல்லார்க்கும் இன்பத்தைச் சமமாகவே வழங்கிக் கொண்டிருக்கின்றான். அவனைச் சார்ந்தவர் அந்த இன்பத்தைப் பெறுகின்றனர். சாராதவர் அதனைப் பெறாது ஒழிகின்றனர். அது அவர் குறையாமன்றி அவன் குற்றமாகாது ஆதலால் என்றவாறு.

சலம்-வஞ்சனை. சங்கரன்-எல்லார்க்கும் ஒப்ப இன்பம் தருபவன்.

"சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன்ஆதல் (ஆதலால்)
சார்ந்தாரைக் காத்தும் சலமிலனே",

என்றார் முதனூலாசிரியர் மெய்கண்டார்.

10. உன்னுமுள தைய மிலதுணர்வா யோவாது
மன்னுபவந் தீர்க்கு மருந்து

இது இறைவன் பிறவிநோய் தீர்க்கும் மருந்தாக அனைவரிடத்தும் இருக்கின்றான் என்கின்றது.

கண்ணழிவு:- உணர்வாய் மன்னுபவம் தீர்க்கும் மருந்து உன்னும்-உன்னிடத்தும் ஒவாது உளது. இதில் ஐயம் இலது என்பது.

பொழிப்புரை:- உயிர்களின் அறிவுக்குள் அறிவாக நின்று அவற்றுக்குத் தொடர்ந்து வரா நின்ற பிறவி நோயினைத் தீர்க்கவல்ல மருந்து போல்பவனாகிய இறைவன் உன்னிடத்தும் நீங்காது இருக்கின்றான். இதில் ஐயம் இன்று என்றவாறு.

உன்னும் உளது என்ற குறிப்பினால் அனைவரது உள்ளங்களிலும் அவன் நீங்காதே இருக்கின்றான் என்பதும் உணர்த்தினார்.

உணர்வாய் என்றது உயிர்களின் அறிவில் அறிவாய் என்றதாம்.

அந்நோய் புல்லாகிய பிறவியிலிருந்து உயிர்களைத் தொடர்ந்து வருகின்றதாகலின் அது மன்னுபவம் எனப்பட்டது. பவம்-பிறவி-பிறவிநோய்.

கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் பத்தாவது குறளில் பிறவியாகிய கடலைக் கடத்தற்கு இறைவனடியைத் தெப்பமாக உருவகித்தார் திருவள்ளுவர். பதிமுதுநிலை அதிகாரத்தில் பத்தாவது திருக்குறளில் பிறவியாகிய நோய்க்கு இறைவனை மருந்தாக உருவகித்தார் இந்நூலாசிரியர்.

பிறவிநோய் தீர்க்கும் மருந்து அனைவர் உள்ளங்களிலும் இருந்தது என்றதால் அதனைச் சிந்தையில் தேடிப் பெறவேண்டும் என்று உணர்த்தப்பட்டது.

உன்னும் என்றதனை இல்லுருபு விரித்து உன்னிலும் எனப்பொருள் காண்க.

அவன் பிறவி நோய் தீர்க்கும் மருந்தாக அனைவரிடத்தும் தங்கியிருந்ததனை இந்த அதிகாரத்திரண்டாம் அருட்பாவின் விளக்கவுரையால் தெளிக.

*முதலாம் அதிகாரம் முற்றியது.*

## இரண்டாமதிகாரம்

## உயிரவை நிலை

அஃதாவது எண்ணிலடங்காது பலவாயுள்ள உயிர்களது தன்மையைக் கூறுவது. பதியின் இயல்பு மேற் கூறினார் இது பசுவின் இயல்பு கூறுவதால் தொடர்பு உடையதாயிற்று.

1. பிறந்தநாள் மேலும் பிறக்கும்நாள் போலுந்
துறந்தோர் துறப்போர் தொகை.

இது ஆன்மாக்களது எண்ணிலடங்காத தொகையினைக் கூறுகின்றது.

கண்ணழிவு:- துறந்தோர் தொகை பிறந்த நாள் தொகை போலும், துறப்போர் தொகை மேலும் பிறக்கும் நாள் தொகை போலும் என்பது.

பொழிப்புரை:- உலகில் ஞானிகளாய்த் துறந்தவரது தொகையானது எல்லாவுயிர்களும் ஒவ்வொரு வருக்கத்திலும் இன்றுவரை பிறந்துவந்த நாட்களைக் கூட்டிவந்த தொகையினைப் போல்வது. இனித் துறக்க விருப்போர் தொகையும் அவை இனி அவ்வாறு பிறக்கவிருக்கும் நாட்களைக் கூட்டிவந்த தொகையினைப் போல்வதே என்றவாறு.

எனவே துறந்தோரும் துறக்கவிருப்போருமாகிய அவர்தொகை எண்ணில் அடங்காது என்றதாம்.

துறந்தோரும் இனித் துறக்கவிருப்போருமாகிய அவர்களனைவரும் ஆன்மாக்களே யாதலின் ஆன்மாக்களின் தொகை எண்ணில் அடங்காது என்பதே இதனாற் கூறப்பட்டதாம்.

துறந்தோர் துறப்போராகிய அவர்மேல் வைத்து ஆன்மாக்களின் பன்மை இதனாற் கூறப்பட்டது.

உயிரது நிலை என அதிகாரத்திற்குப் பெயர் கூறாது உயிரவை நிலை என ஆசிரியர் கூறியதும் ஆன்மாக்களது எண்ணிலடங்காப்பன்மை சுட்டற்கே என அறிக.

சிந்தனைத் திறன் மிக்க இந்த அருட்பாவால் நாம் முடிவாக அறிவது இதுதான்: ஆணவத்தால் இருளில் அழுந்திக் கேவல நிலையில் இருந்த உயிர்கள் எல்லாமே இறைவனது அருளாணையால் மாயையில் தொடக்குண்டு பிறவியில் அழுந்திச் சகல நிலைக்கு வந்து பின் அதனையும் கடந்து இறையருளில் தோய்ந்து ஞானிகளாய்த் துறவு பூண்டு சுத்த நிலை எய்தி முடிவில் இறைவன் திருவடிகளை அணைந்து வீடுபெற்றுப் பிறவா நெறியினைப் பெற்றுவிடும். இதில் விதிவிலக்கு என்பதேயின்றி எல்லாவுயிரும் முடிவில் ஒருநாள் ஞானியாகித் துறந்தேயாதல் வேண்டும் என்பதே இறைவனது சங்கற்பமாம் என்பது.

இது சாத்திர நூலாதலின் "இறந்தாரை எண்ணிக் கொண்டற்று" என்று கூறாராயினார் ஆசிரியர்.

2 திரிமலத்தா ரொன்றதனிற் சென்றார்க ளன்றி
யொருமலத்தா ராயு முளர்.

இது ஆன்மாக்களின் மூவகை வருக்கம் கூறுகின்றது..

கண்ணழிவு:- திரிமலத்தாராயும், அதனில் ஒன்று சென்றார்களாயும் அன்றி ஒரு மலத்தாராயும் ஆன்ம வருக்கத்தார் உளர் என்பது.

பொழிப்புரை: ஆன்ம வருக்கத்தவர் மும்மலம் உடையராயும், அவற்றில் ஒன்று குறைந்த இருமலம் உடையராயும் அவரன்றி ஒருமலம் உடையராயும் ஆகிய மூவகையாய் உள்ளனர் என்றவாறு.

மும்மலம் உடையார் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களையும் உடையவர். அவர் சகலர்

இரு மலம் உடையார் ஆணவம், கன்மம் ஆகிய இரண்டு மலங்களை உடையவர். அவர் பிரளயாகலர்

ஒரு மலம் உடையார் ஆணவம் என்னும் ஒருமலமே உடையவர். அவர் விஞ்ஞானாகலர்.

ஒன்று அதனில் சென்றார்கள் என்றது அந்த மூன்றில் ஒன்று குறைந்தவர் என்றதாம்.

3. மூன்றுதிறத் துள்ளாரும் மூலமலத் துள்ளார்கள்
தோன்றலர்தொத் துள்ளார் துணை.

இது சகலரைப்போல ஏனையிருவர் பிறவிக்கு வாரார் என்கின்றது.

கண்ணழிவு:- மூன்று திறத்து உள்ளாரும் மூல மலத்து உள்ளார்களே. தொத்து உள்ளார் துணை ஏனை யிருவரும் தோன்றலர் என்பது

பொழிப்புரை:- மூன்று வருக்கத்தில் உள்ளவரும் இயற்கையாயுள்ள ஆணவ மலத்தால் பிணிக்கப்பட்டவர்களே. செயற்கையாக வந்து தொற்றிய மாயா மலத்தில் உள்ள சகலரைப் போல ஏனை யிருவரும் உலகில் வந்து பிறவார் என்றவாறு.

எனவே உலகில் பிறந்திறந்து உழல்வார் மாயாமலமும் உடைய சகலர் என்னும் ஒருவருக்கத்தாரே என்றபடியாம்.

ஆணவம் செம்பிற் களிம்புபோல உயிரின்கண் அநாதியே கிடந்த மலமாதலின் அது மூலமலம் எனப்பட்டது. சகச மலம் என்றும் இயற்கை மலம் என்றும் அதனைக் கூறுவர்.

மாயாமலம் உயிர்களுக்குத் "தொத்து" ஆதல் எவ்வாறெனிற் கூறுதும். உயிர்கள் அநாதியில் ஆணவமலத்தில் குளித்து அறிவை முற்றுமாய் இழந்து வாழ்வின்றிச் சடம் போலவே கிடந்தன. அது அவற்றுக்குக் கேவலநிலை என்று சாத்திர நூல்களில் சொல்லப்பட்டது. அவற்றுக்கு வாழ்வளிப்பான் வேண்டி இறைவன் தனது அருட் கூறுகளில் ஒன்றாகிய மாயையை அவ்வான்மாக்களோடு புணர்த்தினான். அவ்வாறு புணர்த்தப்பட்ட மாயை உயிர்களுக்கு உடம்பாயும் உலகாயும் வந்து ஒட்டியது. மாயை இறைவனது ஆணையால் உயிர்களிடத்தே வந்து தொத்திய மலமாதலின் அது தொத்து எனப்பட்டது. அதனாற்றான் மாயை கன்மங்களை ஆகந்துக மலங்கள் என்று சாத்திரங்களும் சொல்லின. ஆணவம் சகச மலம். மாயை கன்மங்கள் ஆகந்து கமலங்கள்.

மாயை ஆன்மாக்களை வந்து தொத்திய பிறகே ஆன்மாக்கள் உடம்புகூடி உலகில் பிறக்கத் தொடங்கின. முதலில் புல்மரம் முதலான ஓரறிவு உயிர்களாகப் பிறந்தன. பிறகு படிப்படியாக ஈரறிவு மூவறிவு நான்கறிவு ஐந்தறிவு உயிர்களாகப் பிறந்து பின் ஆறாவது அறிவாகிய மனவறிவும்

பெற்று மானுடப் பிறவியை அடைந்தன. கேவல நிலையில் வாழ்வின்றிக் கிடந்த ஆன்மாக்கள் இப்பொழுது சகல நிலைக்கு வந்து வாழ்வு பெற்றுவிட்டன. இவ்வுண்மைகள் எல்லாம் தொல்காப்பிய முனிவன் செய்த தொல்காப்பிய மரபியல் சூத்திரங்களாலும், வாதவூர்ப் பெரியார் அருளிய திருவாசகத் தொடர்களாலும் அறியப்பட்டன. அவை,

"ஒன்றறிவதுவே உற்றறிவதுவே
இரண்டறிவதுவே அதனொடு வாயே
மூன்றறிவதுவே அவற்றொடு மூக்கே
நான்கறிவதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறிவதுவே அவற்றொடு செவியே
ஆறறிவதுவே அவற்றொடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே". எனவும்,
"புல்லும் மரனும் ஓரறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே". எனவும்,
"நந்தும் முரளும் ஈரறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே". எனவும்,
"சிதலும் எறும்பும் மூவறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே". எனவும்,
"நண்டும் தும்பியும் நான்கறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே". எனவும்,
"மாவும் மாக்களும் ஐயறிவினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே". எனவும்,
"மக்கள் தாமே ஆறறிவுயிரே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே". எனவும்,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லா மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
சொல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்"
எனவும்,

வருவன கொண்டு தெளியலாம்.

ஆகவே மாயா மலமானது ஆணவத்திற்குப்பின் இடையே வந்து

உயிர்களைத் தொற்றிய மலமாதலின் அது இங்குத் தொத்து எனப்பட்டது. தொத்து உள்ளார் என்பது மாயா மலத்தில் உள்ள சகலரைக் குறித்தது.

சகலரைத் தவிர்த்து ஏனையிருவகை வருக்கத்தாரும் பிறவிக்கு வாரார் என்பது மெய்கண்டார் கூறியதே. அது.

"சிவமென்னும் அந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவமின்றாம் கண் வாசகத்திற் சிவமுண்டாம்
ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கு"

எனவரும் சிவஞானபோத நூலிறுதி வெண்பாவால் அறிக.

4. கண்டவற்றை நாளுங் கனவிற் கலங்கியிடுந்
திண்டிறலுக் கென்னோ செயல்

இது ஆன்மாப் பஞ்சாவத்தினாய் நிற்கும் நிலை கூறுகின்றது.

கண்ணழிவு:- நனவில் கண்டவற்றை நாளும் கனவில் கலங்கி இடும் திண் திறலுக்கு செயல் என்னோ என்பது.

பொழிப்புரை:- நனவில் இருந்தபோது தான் அறிந்திருந்த தத்துவ அறிவுகளை ஒவ்வொரு நாளும் கனவுக் காலத்தில் கலக்கமுற்று இழந்து வருந்தும் திறலற்ற ஆன்மாவுக்கு அவ்வாறு வருந்தும் செயலைத் தவிர வேறு செயல் யாதுளது - ஒரு செயலும் இல்லை என்றபடி.

இது ஆன்மாப் பஞ்சாவத்திதனாய் நிற்கும் நிலைமை கூறியது.

நனவில் ஆன்மா முப்பத்தொரு தத்துவ அறிவுகளுடன் ஐம்பொறிகளையும் ஏவல் கொண்டு இலாடத் தானத்தில் நிற்கும். அது ஆன்மாவுக்கு நனவு நிலை. நனவவத்தையில் அது கலை வித்தை அராகம் காலம் நியதி மாயை ஆகிய ஆறு தத்துவ அறிவுகளை இழந்து வருந்தும். கனவு அவத்தையில் அது கண்டத் தானத்தில் நின்று எஞ்சியுள்ள இருபத்தைந்து தத்துவ அறிவுகளையும் இழந்து அவற்றின் சூக்கும நிழல் அறிவுகள் இருபத்தைந்தோடு இருந்து கனவு காணும். உறக்க அவத்தையில் அது இதயத் தானத்தில் நின்று சூக்கும நிழல் அறிவுகள் இருபத்து நான்கினை இழந்து சூக்கும சித்தம் ஒன்றுடன் மட்டும் உறங்கும். பேருறக்க அவத்தையில் அது நாபித் தானத்தில் நின்று அந்தச் சூக்கும சித்த

அறிவையும் இழந்து உயிர்ப்பு ஒன்றுடன் மட்டும் இருந்து பேருறக்கத்தில் ஆழ்ந்துவிடும். உயிர்ப்படக்க அவத்தையில் அது மூலாதாரத்தில் ஒடுங்கி உயிர்ப்பினையும் இழந்து சடம் போலக் கிடக்கும். இப்படி ஒவ்வொரு அவத்தையிலும் அது அறிவுகளையிழந்து வருந்துதலின் "கலங்கி இடும்" என்றார் ஆசிரியர்.

திண்டிறல் என்பது ஆன்மாவைக் குறித்தது. திண்ணிய வலிமையுடையது என்பது பொருள். இங்கு வலிமை இல்லாததை வலிமையுடையதுபோலச் சொன்னது இகழ்ச்சிக் குறிப்பு.

5. பொறியின்றி யொன்றும் புணராத புந்திக்
கறிவென்ற பேர்நன் றற.

இது ஆன்மாப் பொறிகளின் உதவியின்றி ஒன்றையும் உணராது என்கின்றது.

கண்ணழிவு:- பொறி இன்றி ஒன்றும் புணராத புந்திக்கு – ஆன்மாவுக்கு அறிவு என்ற பேர் அற நன்று என்பது.

பொழிப்புரை:- பொறிகளின் உதவியின்றி யாதொரு விடயத்தையும் உணரமாட்டாத ஆன்மாவுக்கு (அறிவு) (சித்து) என்ற பேர் மிகவும் பொருந்துவதே, பொருந்தாது என்றபடியாம்.

அறிவு என்ற பேர் அறநன்று என்றது இகழ்ச்சிக் குறிப்பு. இங்குப் பொறி என்றது புறப்பொறி அகப்பொறி, இரண்டையும் குறித்து நின்றது. புறப்பொறி மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. அகப்பொறி மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் என்பன. இவற்றை ஞானேந்திறியம் என்றும் அந்தக் கரணம் என்றும் சொல்வார்கள். அவற்றை முறையே அறிவுப் பொறிகள் என்றும் அகப்பொறிகள் அந்தக்கரங்ணகள் என்றும் உணர்க.

பெத்த நிலையில் மாயை உடம்பு பொறிகரணங்களாய் நின்று ஆன்மாவை உணர்த்தும், முத்தி நிலையில் இறைவன் அறிவில் நின்று உணர்த்துவான். இரண்டு நிலையிலும் ஆன்மா உபதேசியே. அதாவது உணர்த்த உணர்வது என்பதுதான்.

புந்தி – உள்ளம். அது இங்கு ஆன்மாவைக் குறித்தது.

6. ஒளியு மிருளு முலகு மலர்கண்
தெளிவி லெனினென் செய

இது ஆன்மாவுக்கு மூன்று வகை நிலைகள் உண்டு என்கின்றது.

கண்ணழிவு:- அலர்கண் தெளிவு இல் எனின் ஒளியும் இருளும் உலகும் என்செய என்பது.

பொழிப்புரை:- விரிந்த கண்ணிடத்துப் பார்வை இல்லையென்றால் ஒளியும் இருளும் உலகும் ஆகிய இம்மூன்றும் இருந்தும் பயன் என்ன? பயன் ஒன்றும் இல்லை என்றதாம்.

கண்ணில் பார்வை இருந்தால் மட்டுமே இது ஒளி என்றும், இது இருள் என்றும், இது உலகு என்றும் பிரித்து அறிய முடியும், இல்லையென்றால் அறிய முடியாது என்றவாறாம். இது பிறிது மொழிதல் அணி. இதனால் அறியப்பட்ட பிறிது பொருள்:-

ஆன்மாவினிடத்து மெய்யுணர்வு வாய்க்கவில்லை யென்றால் ஒளியாகிய சிவத்தையும், இருளாகிய மலத்தையும், உலகாகிய மாயையையும் தெளிய வுணராது என்பதாம். அவற்றைத் தெளிய வுணர்ந்தாலன்றி மலமாயைகளிலிருந்து விடுபட்டுச் சிவத்தைச் சார்ந்து நிற்றல் கூடாதாம் என்க

"அருக்கன் நேர்நிற்பினும் அல்லிருளே காணார்க்கு
இருட்கண்ணே பாசத்தார்க் கீசன்"
எனவரும் மெய்கண்டார் வாக்கினையும் இங்கு உணர்க.

இது உயிரின் மூவகை நிலையினை உணர்த்தியது. ஒளியாகிய சிவத்தைச் சார்ந்து வாழ்வது ஆன்மாவுக்குச் சுத்த நிலை. இருளாகிய மலத்தைச் சார்ந்து கிடப்பது கேவல நிலை. உலகாகிய மாயையைச் சார்ந்து மயங்குவது சகலநிலை என அறிக.

7. சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கணிவை
உய்த்தல்சத சத்தா முயிர்

இது முப்பொருள்களில் இறையும் உலகும் ஒன்றையொன்று புசியாதாக உயிரே அவ்விரண்டையும் புசிக்கும் என்கின்றது.

கண்ணழிவு:- சத்து அசத்தை சாராது. அசத்து சத்தை அறியாது. சதசத்தாம் உயிரே அங்கண் இவை உய்த்தல் ஆம். என்பது.

பொழிப்புரை:- சத்தாகிய பதிப் பொருட்கு முன்னால் அசத்தாகிய உலகம் சூனியமாம். ஆதலின் சத்து அசத்தைச் சாராது. சார்ந்து புசிக்காது. அசத்தும் சத்தை அறிந்து புசிக்காது. அவ்விடத்து அவையிரண்டையும் சத்த சத்தாகிய உயிரே வேறு வேறு காலங்களில் அறிந்து புசிப்பதாம். என்றவாறு.

சத்தாகிய இறை அசத்தாகிய உலகைப் புசிக்காது. அசத்தாகிய உலகும் சத்தாகிய இறையைப் புசிக்காது. சத்த சத்தாகிய உயிரே வேறு வேறு காலங்களில் சத்தையும் அசத்தையும் அறிந்து புசிப்பதாம் என்பது.

அசத்தைச் சார்ந்து நின்ற உயிர் அசத்தைப் புசித்த பிறகே சத்தை அறிந்து புசிக்கும் எனவறிக.

அசத்தையும் சத்தையும் அறிந்து புசிப்பதற்கு ஆன்மாவினிடத்து இருதிறப்பட்ட அறிவும் உண்டு என்று சாத்திரங்கள் கூறும்

"இருதிறன் அறிவுள திரண்டலா ஆன்மா" என்பது சிவஞான போதம். இது சிவஞானபோத நூலில் "யாவையும் சூனியம்" எனவரும் ஏழாஞ் சூத்திரப் பொருளைத் தழுவி நின்றது.

உயிர்க்கு நிலைகள் மூன்றாயினும் வாழ்வு இரண்டிடத்தாம் என்று உணர்த்தியது இந்த அருட்பா. கேவலத்தில் அதற்கு வாழ்வு இல்லை. அங்கு அது உறங்கிக் கிடந்தது என்று உணர்க.

"உய்த்தல் சத" என்ற சீரினைக் கூவிளங்காயாகக் கொண்டு அலகிடின் தளை சிதையாவாம் என்க. அவ்வாறலகிடும்போது லகர வொற்றைக் கெடுக்க.

8. இருளி லிருளாகி எல்லிடத்தி லெல்லாம்
பொருள்கள் இலதோ புவி

இது உயிருக்கு மூவகை உருக் கூறுகின்றது.

கண்ணழிவு:- இருளில் இருள் ஆகி எல்லிடத்தில் எல் ஆம் பொருள்கள் புவிக்கண் இலதோ - இலவோ, உண்டு என்றபடி.

பொழிப்புரை:- இருளைச் சார்ந்தபோது இருளாயும் ஒளியைச் சார்ந்தபோது ஒளியாயும் விளங்கும் பொருள்களும் புவியின்கண் உள. அவற்றைப் போன்றதே ஆன்மாவும் என்றவாறு.

அவற்றைப் போன்றதே ஆன்மாவும் என்பது இங்குச் சொல்லெச்சம். இதனை ஒட்டணி என்பாரும் உண்டு. அவர் சொல்லெச்சம் கொள்ளார்.

அப்பொருள்கள் படிகம் முதலியன.

சார்ந்ததன் வண்ணமாந் தன்மை படிகத்திற்கு உண்டு. அதுபோல ஆன்மாவும் சார்ந்ததன் வண்ணமே பெறும் என்றதாம். படிகத்திற்கு நிறம் இல்லை. ஆனால் அது எந்தப் பொருளைச் சாருமோ அந்தப் பொருளின் நிறத்தையே பெறும். அதுபோல ஆன்மா ஆணவத்தில் குளித்திருந்தபோது அதற்கு இருள் உருவமே இருந்தது. அதனை மலசொரூபம் என்பர். மாயையில் குளித்திருந்தபோது அதற்கு மருள் உருவம் இருந்தது. அதனைத் தத்துவ வன்னரூபம் என்றனர். இறையருளில் குளித்திருந்தபோது அதற்கு அருளுருவே உண்டு. அதனைச் சிவசொரூபம் என்பர்.

"பொருள்கள் இலதோ" என்புழிப் பன்மையும் ஒருமையும் மயங்கி வந்தன. அங்கு இலவோ என உரைத்துக் கொள்க.

எல்லிடத்து எல்லாம் என்பதற்கு விளக்கொளி கதிரொளி இரண்டும் கொள்க. கொள்ளவே ஆன்மா ஒளிமலமாகிய மாயையைச் சார்ந்தபோது அதற்குத் தத்துவ வன்னரூபமும் அருளொளியாகிய இறையைச் சார்ந்தபோது அதற்கு அருளுருவாகிய சிவசொரூபமும் உண்டு என்பது பெறப்படும். படவே இருள் உரு, மருள் உரு, அருள் உரு என்ற மூவகை உருவும் ஆன்மாவுக்குச் சார்ந்ததன் வண்ணமாம் என்பது இந்த அருட்பாவால் உணர்த்தப்பட்டது எனலாம்.

9. ஊமன்கண் போல ஒளியும் மிகவிருளே
யாமன்கண் காணா தவை

இது பாசவுயிர்க்கு ஈசன் இருளாம் என்கின்றது.

கண்ணழிவு:- ஊமன் கண்ணுக்கு ஒளியும் இருளேயாம் போல மன்னைக் காணாதவை கண்களுக்கு இறையும் இருளாம் என்பது.

பொழிப்புரை:- கூகையின் கண்ணுக்குப் பகலும் இரவேயானாற்போல, இறையைக் காணாத பாசவுயிர்களின் கண்களுக்கு இறையும் இருளாம் என்றவாறு.

ஒளியும் இருளேயாம் என்பது உவமைக்கும் பொருட்கும் பொருந்த நின்றது. உவமைக்கண் பகலும் இரவாம் எனவும், பொருட்கண் இறையும் இருளாம் எனவும் உரைத்துக் கொள்க.

இது சிவஞான போதத்துப் பதினொன்றாஞ் சூத்திரத் திரண்டாமதிகரணத்துள் வந்த "அருக்கன் நேர் நிற்பினும் அல்லிருளே காணார்க்கு - இருட்கண்ணே பாசத்தார்க் கீசன்" என்ற உரைப்பாட்டுத் தொடரைத் தழுவி வந்தது.

குருடர் கண்ணுக்கு ஞாயிறு இருளானாற் போலப் பாசத்தார் கண்ணுக்கு ஈசன் இருளாம் என அங்குக் கூறப்பட்டது.

கூகை கண்ணுக்குப் பகல் இரவானாற் போலப் பாசத்தார் கண்ணுக்கு இறை இருளாம் என இங்குக் கூறப்பட்டது.

இதனால் பாசத்தாற் பிணிப்புண்ட உயிரியல்பு கூறப்பட்டது.

10. அன்றளவு மாற்றுமுயிர் அந்தோ அருள்தெரிவ
தென்றளவொன் றில்லா விடர்

இது உயிர்களுக்குக் குறிக்கோள் இன்னதென்கின்றது.

கண்ணழிவு:- அன்று தொட்டு இன்றளவும் அளவு ஒன்று இல்லா இடரினை ஆற்றும் உயிர் அந்தோ, அருள் தெரிவது என்று என்பது.

பொழிப்புரை:- ஆணவத்தில் அழுந்திச் சடம்போலக் கிடந்த அந்தநாள் தொட்டு மாயையில் அழுந்திப் பிறந்தும் இறந்தும் வருகின்ற இந்த நாள் வரை ஒரு அளவில்லாத துன்பங்களைச் சுமந்துவரும் இந்த உயிரானது இறைவனது அருளில் அழுந்தி இன்புறும் நாள் இனி எந்த நாளோதான் என்றவாறு.

அந்தோ என்பது இரக்கக் குறிப்பு.

ஆணவத்தில் குளித்து நெடுங்காலம் சடம்போலக் கிடந்த நாள் ஒழிய மாயையில் குளித்துப் பலகோடி பிறவிகளில் பிறந்திறந்து உழன்று வந்துள்ள ஆன்மாக்கள் இறையருளில் குளித்து வாழ்வினை நிறைவு செய்து கொள்ளவில்லையே என்பதுதான் இங்கு ஆசிரியர்க்கு ஏக்கமாயிருந்தது. அது அந்தோ எனவந்த இரக்கக் குறிப்புச் சொல்லால் உணரப்பட்டது.

அதனால் இது உயிரினது குறிக்கோள் இன்னது என உணர்த்தியதாம் என்க. அது இறையருளில் குளித்து வாழ்வை நிறைவு செய்து கொள்ளல் என்பதே

**இரண்டாமதிகாரம் முற்றியது.**

*மூன்றாமதிகாரம்*

## இருள் மல நிலை

அஃதாவது ஆணவ மலத்தின் தன்மையைக் கூறுவது. ஆணவம் உயிர்க்கு இருள்மலம் எனப்-பட்டதால் ஒளிமலம் என்பதும் ஒன்று உண்டு. அதுவே மாயை எனவுணர்க. மாயை ஆன்மாக்களை அடுத்தபோது அவற்றுக்கு உடம்பாயும் உலகாயும் கன்மமாயும் வந்தே அடுத்தது. அதனால் உயிர்களைப் பற்றிய மலங்கள் மூன்று என்பதே சித்தாந்தமாம். "விடிவாம் அளவும் விளக்கனைய மாயை - வடிவாதி கன்மத்து வந்து" என இந்நூலாசிரியரே இங்கு வேறு ஓரிடத்துக் கூறுதலை ஓர்ந்து உணர்க.

1. துன்றும் பவத்துயரும் இன்பும் துணைப்பொருளும்
இன்றென்ப தெவ்வாறும் இல்

இது பிறப்பும் வீடும் இல்லையென்று உணர்த்திக் கொண்டிருக்கின்ற ஆணவத்தின் கொடுமை இன்னதென்கின்றது.

கண்ணழிவு:- இருள் மலமானது துன்றும் பவத்துயரும், இன்பும் அவற்றுக்குத் துணைப் பொருளும் இன்று என்பது. அது எவ்வாறும் இல் என்பது.

பொழிப்புரை:- ஆணவமலமானது ஆன்மாக்களுக்குத் தொடர்ந்து வருகின்ற பிறவித் துன்பமும் அது நீங்க வருகின்ற பேரின்பமும் அவ்விரண்டற்கும் காரணமாயுள்ள மாயையும் திருவருளும் ஆகிய இவற்றுள் ஒன்றுதானும் இல்லையென்றே உணர்த்தி நிற்பதாம். ஆனால் அது ஒருவாற்றானும் உண்மையன்று என்றவாறு.

அதிகாரத்தால் எழுவாய் வருவித்து உரைக்கப்பட்டது.

இருள் மலமானது தான் அடுத்து நின்ற ஆன்மாக்களது அறிவினை முற்றுமாய்க் கவர்ந்து உறக்கத்தைக் கொடுத்து அவற்றைச் சடம் போலாக்கும் இயல்பினது. அதுவொன்றே ஆன்மாக்களது அத்துவிதப் பேரின்பத்திற்குப் போதுமானதாயிருக்க அவற்றுக்குத் தொடர்ந்துவரும் பிறவியால் வரும் துன்பமும் அது நீங்க வரும் பேரின்பமும் அவற்றுக்குக் காரணமாய்க் கற்பித்துக் கொள்ளப்படும் மாயையும் திருவருளும் ஆகிய அவையெல்லாம்

எற்றுக்கு என்னும் கருத்தால் இவ்வாறு ஆணவத்தின் பெருமை தோன்றக் கூறப்பட்டது என்றாலும் அவ்வாறு கருதுவது சாத்திர நெறிக்குப் புறம்பானது. அன்றியும் அது உண்மையும் அன்று என்றே முடித்துக் கூறினார் ஆசிரியர்.

இதனால் ஆணவம் ஆன்மாக்களது அறிவினை மறைப்பதோடு மட்டும் நில்லாது அவற்றுக்குத் தவறான நெறியையும் காட்டிக் கொண்டிருக்கும் என்பதும் கூறப்பட்டது.

2. இருளான தன்றி யிலதெவையு மேகப்
பொருளாகி நிற்கும் பொருள்

இது பரம்பொருள் போல ஆணவமும் ஏகமாய் எண்ணிறந்த சத்திகளையுடையதென்கின்றது.

கண்ணழிவு:- எவையும் - எவற்றிலும் ஏகப் பொருளாகி நிற்கும் பொருள் இருளானதன்றி இலது என்பது.

பொழிப்புரை:- எல்லா வுயிர்களிடத்தும் அவையேதான் என்னும்படி ஏகமாய்க் கலந்து நிற்கும் பொருள் மலவிருள் தானன்றி வேறு ஒன்றும் இலது என்றவாறு.

ஆணவ மலமானது பொருள் ஒன்றேயாய் எண்ணிறந்த சத்திகளை யுடையதாய் அனைத்து உயிர்கள்தோறும் கலந்து நிற்பது என்பது இதனால் உணர்த்தப்பட்டது.

இஃதொரு சாரார் கருத்தென வுணர்க.

“போதகாரியம் மறைத்து நின்றது புகல் மலங்காண்
ஓதலாம் குணமுமாக உயிரினுள் வீரவலாலே”
என வரும் அருணந்தியார் வாக்கினால் ஆணவ மலமானது உயிரின் குற்றக் குணமே என்பதும் ஒரு சாரார் கருத்தெனத் தெரிகிறது.

இதிலிருந்து நாமோர் முடிவுக்கு வரலும் கூடுவதே. அது இது. இறைவன் ஒருவனே. அவனது அருளாற்றல் பல திறத்தது. அவற்றுள் ஒன்று மறைப்பாற்றல். அது உயிர்களிடத்து முதலில் வந்து ஒட்டியது. அதனால் அது இயற்கை மலம் எனப்பட்டது. பிறிதொன்று உணர்த்தாற்றல். அது

உயிர்களிடத்துப் பின்னர் வந்து ஒட்டியது. அதனால் அது செயற்கை மலமாகிய மாயை எனப்பட்டது. இவற்றுள் முன்னது உயிர்களை உறக்கத்தில் ஆழ்த்தியது. பின்னது உயிர்களை உலகில் மூழ்குவித்தது. அதனால் அவையிரண்டும், உயிர்களுக்குக் குற்றங்களாகவே கருதப்பட்டன. இனி மாயை உயிர்களை வந்தடுத்தபோது அது அவற்றுக்கு உடம்பும் உலகுமாகவே வந்து அடுத்தது. உடம்பு கூடிய பின் உயிர்களுக்கு வினையும் கூடியது. அது உயிர்களைப் பிறப்பில் ஆழ்த்தியது. அதனால் உயிர்களுக்கு ஆணவம் மாயை கன்மம் என மூன்றுமே மலங்களாய்க் கருதப்பட்டன என்பதாம்.

இங்குத் தார்க்கிகர் ஒரு தடையை எழுப்புவர் - அது உயிர்களுக்கு இல்லாத குற்றங்களை இறைவன் கொடுத்துக் கெடுப்பது எதற்கு என்பதே அந்தத் தடை. அதற்கு விடை : அந்தக் குற்றங்கள் மூன்றும் உயிரிடத்து இல்லாமலில்லை. அவற்றுக்கான கருக்கள் உயிரிடத்து அநாதியே இருந்தன. இறைவனது ஆணையால் அவை விளையுங்காலத்தில் விளைந்து தேயுங்காலத்தில் தேய்ந்தன என்பதே அதற்கான விடையாம் என்க. உள்ளது தோன்றும், இல்லது தோன்றாது என்பது சித்தாந்தமாகலான் என்க.

3. ஒரு பொருளுங் காட்டா திருளுருவங் காட்டும்
இருபொருளுங் காட்டா திது.

இது உலகத் திருளினும் மலவிருள் கொடியது என்கின்றது.

கண்ணழிவு:- இருள் - உலகத்திருளானது ஒரு பொருளும் காட்டாது. ஆனால் அது தன் உருவம் காட்டும். இது - இம்மலவிருள் இருபொருளும் காட்டாது என்பது.

பொழிப்புரை:- உலகத் திருளானது தான் சார்ந்த பொருள்களின் உருவத்தை மறைக்கும். ஆனால் அதுதன் உருவத்தைக் காட்டிக் கொண்டிருக்கும். மலவிருளானது தான் சார்ந்த உயிர்களையும் மறைக்கும். தன்னையும் மறைக்கும் இது அவ்விரண்டுக்கும் உள்ள வேற்றுமையாம். அதனால் உலகத் திருளினும் மலவிருள் கொடியது என்றவாறாம்.

4. அன்றளவி யுள்ளளொளியோ டாவி யிடையடங்கி
இன்றளவும் நின்ற திருள்

இது கேவல நிலை தொட்டுச் சகலநிலை காறும் உயிர்களுக்கு மலவிருள் கொடாது நின்றது என்கின்றது.

கண்ணழிவு:- இருள் - மலவிருளானது ஆவியிடை அன்றே அளவி அடங்கி உள் ஒளியோடு இன்றளவும் நின்றது என்பது.

பொழிப்புரை:- மலவிருளானது உயிரின்கண் அநாதியே கலந்து ஒளிந்து உயிரின்கண் வியாபகமாய் நின்ற இறையருளோடு செறிவுறாது இன்றளவும் நீங்காமே நின்றது என்றவாறு

அன்று என்றது கேவல நிலையையும் இன்று என்றது சகல நிலையையும் குறித்து நின்றன.

அன்று தொட்டு இன்று வரை நீங்காது நின்றது என்றமையால் முத்திக் காலத்துச் சுத்த நிலையில் அது நீங்கும் என்பது பெற்றாம்.

இறையொளியும் உயிரறிவில் விரவி நின்றபோது, அங்கு ஆணவம் உயிரில் விரவி நின்றது எவ்வாறெனில் அஃதவ்விறை யொளிக்குந் தோன்றாதவாறு உயிரில் ஒளிந்து நிற்கும் என்ற கருத்தால் அடங்கி நின்றது என்றார். அதனால் சகல நிலையில் ஆன்மாவும் இறையொளியை அறியாது. ஆன்மாவில் ஒளிந்து நின்ற ஆணவமலமும் இறையொளியை அறியாது என்றபடியாம். முத்திக் காலத்தில் ஆன்மா இறையொளியை அறிந்து நிற்கும்போது ஆன்மாவில் ஒளிந்து நின்ற ஆணவமும் இறையொளியைச் சந்திக்க நேரும். அது பொழுது அம்மலம் எரி முன்பட்ட பஞ்சுத் துய்போல வெந்து கெடும் என்றவாறாம். ஆணவம் அப்பொழுது வறுத்த வித்தினைப் போல வலி குன்றும் என்பதே சித்தாந்தமாம்.

5. பலரைப் புணர்ந்துமிருட் பாவைக்குண் டென்றுங்
கணவற்குந் தோன்றாத கற்பு.

இது மலம் உயிர்களைக் கலந்து நின்றாலும் உயிர்களுக்கு அது தன்னைக் காட்டாது என்கின்றது.

கண்ணழிவு:- பலரைப் புணர்ந்தும் கணவற்கும் தோன்றாத கற்பு இருட்பாவைக்கு என்றும் உண்டு என்பது.

பொழிப்புரை:- இருளாகிய பாவை ஒருத்தியே உயிர்களாகிய கணவர் பலரைத் தோய்ந்தாலும் அவள் கற்!பு என்றைக்கும் கெட்டதில்லை. ஏனென்றால் அவள் தனது கற்பென்னும் மரும உறுப்பினை ஒருவனுக்கேனும் இந்நாள் வரை காட்டவில்லை யாதலால்,

ஆணவம் உயிர்களைத் தோய்ந்திருந்த போதெல்லாம் உயிர்கள் உறக்கத்தில் ஆழ்ந்து சடம்போலவே கிடந்தனவாதலால் அவை தம்மையே அறியாதிருந்தனவாதலோடு தம்மை அக்கதிக்கு ஆளாக்கிய ஆணவத்தையும் அறியாதிருந்தனவாதலால் கணவனுக்கும் தோன்றாத கற்பு அவளுக்கு என்றும் இருந்ததாக ஆசிரியர் இங்குத் திறம்படக் கூறினார்.

மேல் மலவிருள் "இருபொருளுங் காட்டாது" என்றதனையே இங்கு ஆசிரியர் சமத்காரம் தோன்றக் கூறினார் என்று உணர்க.

6. பன்மொழிக ளென்னுணரும் பான்மை தெரியாத
தன்மையிரு ளார்தந் தது.

இது ஆன்மாக்கள் சகல நிலையிலும் தம்மையும் தலைவனையும் உணராமைக்குக் காரணம் மலவிருளே என்கின்றது.

கண்ணழிவு:- பல மொழிகள் என், உணரும் பான்மை தெரியாத தன்மையை இருளாரே தந்தது - தந்தார் என்பது

பொழிப்புரை:- பல சொல்லல் எதற்கு? சகல நிலையில் ஒளிமலமாகிய மாயை ஆன்மாக்களுக்கு முப்பத்தொரு வகையான தத்துவ உணர்வுகளையும் ஊட்டி உணர்த்தி நின்றபொழுதினும் அவ்வான்மாக்கள் தம்மையும் தம் தலைவனையும் உணராதிருந்தன வென்றால் அந்தவொரு மயக்க நிலையினை அந்த ஆன்மாக்களுக்கு அந்த இருளாரே தந்தார் என்பது தான்.

இருளார் என்புழி ஆர் விகுதி ஆணவத்தின் குணவிசேடம் தோன்ற அதனை உயர்த்தற்கண் வந்தது. இழிவு சிறப்பு.

உணரும் பான்மை தெரியாத தன்மை என்றது உணரும் தன்மையை உணராதவாறு மறைக்கின்ற மயக்க நிலை என்றதாம். அதாவது அறிவை மறைக்கின்ற மயக்க வுணர்வினை ஆணவமே தந்ததாம் என்பது.

சகல நிலையில் மாயை உணர்த்தவும் ஆன்மா உணராதிருந்தமைக்குக் காரணம் ஆணவமே என்பது இதனாற் கூறப்பட்டது.

7. இருளின்றேல் துன்பென் உயிரியல்பேல் போக்கும்
பொருளுண்டேல் ஒன்றாகப் போம்.

இது மலம் ஒரு பொருளே என்கின்றது.

கண்ணழிவு:- இருள் இன்றேல் உயிர்க்கு துன்பு என், அது உயிர்க்கு இயல்பேல் போக்கும் பொருள் உண்டேல் - உண்டான காலத்தில் குணத்தோடு உயிரும் ஒன்றாகப்போம். அதனால் அது குணமன்று பொருளே என்பது.

பொழிப்புரை:- மலம் என ஒரு பொருள் இல்லையென்றால் உயிருக்குத் துன்பம் ஏது? துன்பம் இருந்ததால் மலம் என்று ஒரு பொருளும் இருந்ததாம். அந்த மலம் உயிருக்கு இயல்பான குணமே என்று சொல்வாயானால் முத்திக் காலத்தில் மலத்தைப் போக்கும் இறைப்பொருள் தரிசனமாங்கால் குணமாகிய மலத்தோடு குணியாகிய உயிர்ப் பொருளும் அழிந்து போகும். அப்படியொரு சித்தாந்தம் இல்லையாகையால் மலம் குணமன்று, பொருளே என்பதாம் என்றவாறு,

"இது இவ்வாசிரியருக்குக் கருத்தாக இருக்கலாம். இவர் கருத்துப்படி இங்குப் பொருள் நான்காயிற்று. வேறு ஓரிடத்தில் இவரே ஏகன் அநேகன் இருள்கருமம் மாயை இரண்டு ஆக இவை ஆறு ஆதியில்" என்றதால் இந்நூலாசிரியர் பொருள் ஆறு எனவும் உடன்பட்டார் எனத்தெரிந்தது. இங்குக் கருத்து வேற்றுமைக்கு இடம் உண்டு எனத் தெரிகிறது.
மிருகேந்திரம் முதலிய சில ஆகமங்கள் சைவ சித்தாந்தக் கருப்பொருள் மூன்று என்றன. சில நான்கு என்றன, மற்றுஞ் சில ஐந்து என்றன, வேறு சில ஆறு என்றன, பின்னுஞ் சில ஏழு என்றன, ஆகமங்களிலேயே அது குறித்த முரண்பாடுகள் நிறையவே இருந்தன.

மெய்கண்டார் பொருள் மூன்றே கொண்டார். சிவஞான போதத்தில் ஆறு, ஏழாஞ் சூத்திரங்களால் பாசமாகிய உலகம் அசத்து எனவும், பதியாகிய இறைப்பொருள் சத்து எனவும், பசுவாகிய உயிர்ப் பொருள் சுத்த சத்து எனவும் வரைய றுத்தது கொண்டு அது அறியப்பட்டது.

மலம் பொருளா குணமா என்பதிலும் கருத்து வேறுபாடுகள் இருந்தன. இந்நூலாசிரியர் இங்கு மலத்தைப் பொருள் என்றார். போத காரியம் மறைத்து நின்றது புகல் மலங்காண் – ஓதலாம் குணமுமாக உயிரினுள் விரவலாலே என

அருணந்தியார் கூறியது கொண்டு அவர் குணம் எனவும் உடன்பட்டார் எனத்தெரிந்தது.

மெய் கண்டார் மலத்தைப் பொருள் எனக் கொண்டிருந்தால் ஆறு ஏழாம் சூத்திரங்களால் அது சத்தா அசத்தா என வரை செய்திருப்பார். அங்ஙனம் அவர் வரை செய்யாமையால் அவர் அதனைக் குணம் என்று கருதினார் என்றே தெரிந்தது.

இப்படியாக ஆகமங்களும் ஒன்றுக்கொன்று முரண்பட்ட காரணத்தால் தமிழகத்துச் சான்றோர்களாகிய கச்சியப்ப சிவாசாரியாரும் மெய்கண்டாரும் பொருள் மூன்றே கொண்டனர். அந்த வழியில் ஆணவத்தையும் கன்மத்தையும் உயிரின் குணமும் தொழிலுமாகக் கொள்ளுதலும் சைவ சித்தாந்தத்துள் ஒரு சாரார் கருத்தெனத் தெரிகிறது. ஆணவம் உயிருக்கு ஒருகுற்றக் குணமாயிருத் தலினாலன்றோ செம்பில் களிம்புபோல உயிரினிடத்து அது இயல்பாயிருந்தது என்றும், இரசவாதத்தால் களிம்பு வீறழிந்த காலைச் செம்பு பொன்னாதல் போல இறைவனது அருளாற்றலால் மலம் வீறழிந்த காலைச் சீவனும் சிவனாந் தன்மையெய்திச் சிவத்தோ டிரண்டறக் கலக்கும் என்றெல்லாம் சித்தாந்தம் கூறுகின்றது.

"மலம் நசித்துக் கப்பின்றாம் ஈசன்கழல்" என்புழி மெய்கண்டாரும் நசித்தல் என்பதற்கு வீறழிதல் என்றே பொருள் குறித்தார் என்றும் அறியப்பட்டது. அன்றியும் மலம் என்பது பொருளேயாயின் அது உயிரினுள் ஒன்றாயியைதலும் பெறப்படாதாம் என்க. அதனால் ஆணவமலத்தைக் குணமெனக் கொண்டொழிதலே தக்கதாம் என்க. அது குற்றக் குணம்.

8. ஆசாதி யேலணைவ காரணமென் முத்திநிலை
பேசா தகவும் பிணி

இது ஆணவமலம் உயிரினிடத்து அநாதியே உள்ளது என்கின்றது.

கண்ணழிவு:- ஆசு ஆதியேல் அணைவ காரணம் என், முத்திநிலை பேசாது, பிணி அகவும் என்பது

பொழிப்புரை:- ஆணவமலம் இயற்கை மலமேயன்றி ஒரு காலத்தில் வந்து சேர்ந்த மலமாயின் அவ்வாறு அதுவந்து சேரக் காரணம் இல்லை. முன்னால் தூயதாயிருந்த ஆன்மாவினிடத்து ஆணவம் தன்னியல்பால்

வந்து பொருந்திற்று என்று சொல்லப்படுமேயானால் அவ்வாறு அது முத்தி நிலையிலும் வந்து பொருந்துமாதலின் ஆன்மாவுக்கு முத்திநிலை என்று ஒன்று இருப்பதாகவே சொல்ல முடியாது. அதனால் ஆணவம் ஆன்மாவினிடத்து அநாதியே உடன் தோன்றின ஒரு குற்றம் எனவே கருதப்படும் என்றவாறு.

இடையில் வந்து சேர்ந்த மாயாமலத்தினைப் போலவன்றி ஆணவம் உயிரினிடத்து இயல்பாகவே இருந்தது என்று இது உணர்த்திற்று.

ஆணவம் உயிர்க்கு இயற்கைமலம் என்ற காரணத்தாலேதான் அதனைச் சகசமலம் என்றும் இடைவந்து நுழைந்த மாயாமலத்தினையும் கன்ம மலத்தினையும் ஆகந்துக மலங்கள் என்றும் சாத்திரங்கள் சொல்லின.

அவ்வாறு ஆகமங்கள் சொல்லியதை வைத்துக் கொண்டும் ஆணவ மலத்தினை உயிர்க்குக் குணமாய் விளைந்த மலம் என்றும் மாயாமலத்தினை உயிர்க்கு உடம்பாயும் உலகாயும் விளைந்த மலம் என்றும் கொள்ள் இடம் உண்டு. இவை தவிர்ந்த மூன்றாவதொன்றாகிய கன்ம மலத்தினை உயிரின் வினையாய் விளைந்ததெனல் தக்கதாம் என்க. மாயை உயிர்க்கு உடம்பாய் அடுத்த பின்னர கன்ம மலம் விளங்கித் தோன்றுவதாம் எனவும் உணரல் வேண்டும். உலகத்தில் உடம்போடு நம் கண்ணிற்படுகின்ற ஒவ்வாரு உயிருக்கும் உடம்பும் குணமும் தொழிலும் அமைந்திருத்தலை நாம் அறிவோம். உடம்பு மாயையால் கிடைத்தது. குணம் மலத்தால் உண்டானது. தொழில் கன்மத்தால் விளைந்தது. இந்த மூன்று குற்றக் கூறுகளுக்கான கருக்கள் உயிரினிடத்து அநாதியே அமைந்து கிடந்தன. அவை விளையுங் காலத்தில் இறைவனது ஆணையால் விளைந்தனவென்பதே இங்குச் சித்தாந்தமாம் எனக.

இந்த அடிப்படையில் நின்று உயிர் உணர்தல் தன்மைத்தே ஆயினும் உயிரிடத்துள்ள இந்த மூன்று குற்றங்களால் அது உணர்த்த உணரும் உபதேசியே என்று சாத்திரங்கள் கூறும்.

பிணி அகவும் ஆதலின் முத்திநிலை பேசாது எனக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க.

9. ஒன்று மிகினும் ஒளிகவரா தேலுள்ளம்
என்று மகலா திருள்

இது உயிர்களுக்குச் சகல நிலையில் மாயையாலும் சிறிது மலவிருள் நீங்கும் என்கின்றது.

கண்ணழிவு:- இருள் மிகினும் ஒன்று ஒளியால் கவரப்படாதேல் உள்ளத்தின்கண் இருள் என்றும் அகலாது என்பது.

பொழிப்புரை:- இருள் மிகுதியாக இருந்தபோதினும் மின்மினி போன்ற சிறிய ஒளிப் பொருளாலும் அவ்விருள் கவரப்படுவதாம். அவ்வாறு கவசரப்படாதேல் உயிரின்கண் மலவிருள் சகல நிலையில் அன்றிச் சுத்த நிலையிலும் நீங்காதாம் என்றவாறு. எனவே மலவிருள் சகலநிலையில் மாயையாலும் சிறிது கெடும் என்றவாறாயிற்று.

மாயையாலும் சிறிது கெடும் என்பது இங்குச் சொல்செலச்சமாம்.

இருட் காலத்தில் மின்மினி போன்ற ஒளிப் பொருளாலும் இருள் சிறிது நீங்குவதுண்டு அதுபோல உயிர்களுக்குச் சகலநிலையில் ஒளிமலமாகிய மாயையாலும் மலவிருள் சிறிது கெடுவதுண்டாம் என்பது இங்குக் கூறப்பட்டது.

மிகினும் என்பதற்கு எழுவாய் வருவித்து உரைக்கப்பட்டது. ஒன்று - சிறிது என்னும் பொருட்டு. அதனை ஒளியுடன் கூட்டுக. ஒன்று ஒளி - மின்மினி போன்ற சிறிய ஒளிப் பொருள். ஒளி கவர்தலாவது ஒளியால் இருள் நீங்குதல் என்பதாம்.

இதற்கு விளக்கம் அடுத்து வரும் பாவினால் ஆசிரியர் கூறுவார்.

10. விடிவா மளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து

இது மேலதற்கு ஒரு விளக்கம் கூறுகின்றது.

கண்ணழிவு:- விடிவாம் அளவும் மாயை வடிவாதி கன்மத்துடன் வந்து விளக்கு அனைய - உயிர்களுக்குக் கைவிளக்கைப் போன்று உதவும் என்பது.

பொழிப்புரை:- இருட்டறையில் இருந்தார்க்குப் பொழுது விடிகின்ற வரையில் கைவிளக்கு உதவினாற்போலச் சகலநிலையில் இருந்த ஆன்மாக்களுக்கு வீட்டுநெறி தொடங்கும் வரையில் ஒளிமலமாகிய மாயையானது உடம்பு பொறி கரணங்களாயும் உலகாயும் உலக போகங்களாயும் புண்ணிய பாவங்களாயும் அடுத்து உதவிக் கொண்டிருக்கும் என்றவாறு.

கை விளக்கால் அறையில் சிறிது இருள் நீங்கினாற்போல மாயையால் உயிர்களிடத்தில் மலவிருளும் சற்றே நீங்குவதாம் என்பது இதனாற் கூறப்பட்டது.

விடிந்தபின் கதிரவன் பேரொளியால் அறையில் இருள்முற்றும் நீங்கினாற்போல வீட்டுநெறி தொடங்கும்போது இறைவனது திருவருளால் ஆன்மாக்களிடத்துள்ள மலவிருள் முற்றுங்கெடுவதாம் எனவும் இங்கு உணர்க.

வடிவு ஆதி என்றதால் தனுகரண புவன போகங்கள் என்று உரை காண்க. கன்மம் என்றது புண்ணிய பாவங்கள். இவையெல்லாம் மாயையால் ஆன்மாக்களுக்குக் கிடைக்கும் உபகாரங்கள். அவையெல்லாம் இருளில் விளக்குப் போலச் சகல நிலையில் ஆன்மாக்களுக்கு அறிவினைச் சிறிது விளக்கும் கருவிகளாதலின் "விளக்கனைய" என்றார்.

மாயை வடிவாதி கன்மத்துடன் வந்து விடிவாமளவும் விளக்கு அனையவாம் என்று கொண்டு கூட்டி முடிக்க.

மூன்றாமதிகாரம் முற்றியது.

## நான்காம் அதிகாரம்

## அருளது நிலை

அஃதாவது இறைவனது அருள் தன்மையை விளங்கக் கூறுவது. அருளாவது தொடர்பு பற்றாது எல்லா வுயிர்கள் மாட்டும் இயல்பாக எழுகின்ற கருணை என்று பரிமேலழகர் உரை கூறினார். அந்தக் கருணையை முற்றுமாக வுடையவன் இறைவன். இறைவன் வேறு அருள் வேறு என்று கருதுதல் கூடாது. இறைவனே அருள். அருளே இறைவன் என்றுதான் நினைக்க வேண்டும். இறைவனோ யாராலும் காண்டற்கரியவன். ஆனால் அவனது அருளோ அனைவர்க்கும் அனுபவப் பொருளாய் விளங்குவது. அது உலகில் வியாபகமாய் எங்கும்நிறைந்திருப்பது. அந்த உண்மையை அறிந்தவர் சிலர். அறியாதவர் பலர். ஆன்மாக்கள் உலகில் வாழ்ந்தாலும் இறைவனது அருளில் வாழ்கின்றன என்பதுதான் உண்மை. அதனை விளங்க வுரைப்பது இந்த அதிகாரம்.

மேலை யதிகாரம் உயிர்களிடத்துள்ள மலவிருளை உணர்த்திற்று. இது இறைவனிடத்துள்ள திருவருளை உணர்த்துகின்றமையின் தொடர்பு உடையதாயிற்று.

1. அருளின் பெரிய தகிலத்தில் வேண்டும்
   பொருளிற் றலையிலது போல்.

இது உலக நெறிக்குப் பொருள் சிறந்தது போல வீட்டு நெறிக்கு அருள் சிறந்ததாம் என்கின்றது.

கண்ணழிவு:- அகிலத்து வேண்டும் பொருளின் தலை இலதுபோல் அருளின் பெரியது இல் என்பது

பொழிப்புரை;- உலக நெறியில் உயிர்கள் விரும்பும் பொருளைக் காட்டிலும் மேலான ஒனறு இல்லையாதல் போல வீட்டு நெறியில் அருளைக் காட்டிலும் மேலான ஒன்று இல்லையாம் என்றவாறு.

மக்கள் உயிர்க்கு இரண்டு வகையான வாழ்வுகள் அமைந்துள்ளன. ஒன்று உலக வாழ்வு. மற்றொன்று இறைவாழ்வு. உலக வாழ்வு உலகிலிருந்து கிடைக்கும் பொருளால் சிறப்பு எய்தும். இறைவாழ்வு இறைவனிடமிருந்து கிடைக்கும் அருளால் சிறப்பு எய்தும். முன்னதை உலகிலிருந்து தேட

வேண்டும். பின்னதை இறைவனிடமிருந்து தேடவேண்டும். பொருளால் உலகவாழ்வு சிறக்கும். அருளால் இறைவாழ்வு சிறக்கும் என்பது இதனாற் கூறப்பட்டது.

அகிலத்து வேண்டும் எனக்கொண்டு கூட்டுக.
தலை-தலையானது, மேலானது
பொருளிலார்க் கிவ்வுலக மில்லை அருளிலார்க்
அவ்வுலக மில்லாகி யாங்கு என்பது திருக்குறள்.

2. பெருக்கம் நுகர்வினை பேரொளியா யெங்கும்
அருக்கனென நிற்கும் அருள்

இது உயிர்கட்கு இறையருளே பெருக்கமும் நுகவினையுமாய் இருந்தது என்கின்றது.

கண்ணழிவு:- எங்கும் பேரொளியாய் நிற்கும் அருக்கன் என அருள் நிற்கும். அதுவே உயிர்கட்கு பெருக்கமும் நுகர்வினையும் ஆம் என்பது.

பொழிப்புரை:- உலகில் எவ்விடத்தும் பேரொளியாய் நிறைந்து நிற்கும் கதிரவன் ஒளிபோல இறையருள் உலகெங்கும் வியாபகமாய் நிறைந்து நிற்கின்றது. அதுவே உயிர்களுக்குச் செல்வமாகவும் அச்செல்வத்தை அனுபவித்தற்கான செயற்பாடுகளாகவும் அமைந்துகிடந்தது என்றவாறு.

உலக நெறியில் வாழ்கின்றவர்க்குப் பொருட் செல்வமாயும் அப்பொருளைத் தேடிப்பெறுவதற்கான உலக நெறிமுறைகளாயும் விளங்குவது அத்திருவருளேயாம். வீட்டு நெறியில் வாழ்வார்க்கு அருட்செல்வமாயும் அவ்வருளைத் தேடிப் பெறுவதற்கான தவநெறிகளாயும் விளங்குவதும் அத்திருவருளேயாம். ஆகவே திருவருளின் உபகாரமின்றி உலகநெறியும் நடவாது, வீட்டு நெறியும் நடவாது என்று உணர்த்தியது இந்தத் திருவருட்பா.

உலக நெறியில் நின்றார்க்குப் பொருளையும் பொருளைப் பெறுவதற்கான நெறிமுறைகளையும் வகுத்துக் கொடுத்ததும் திருவருளே. வீட்டு நெறியில் நின்றார்க்கு அருளையும் அருளைப் பெறுவதற்கான நெறிமுறைகளையும் வகுத்துக் கொடுத்ததும் அந்தத் திருவருளே என்பதுதான் இதற்குக் கருத்தாகும்.

பெருக்கம் - மேன்மேலும் வளர்வதாய செல்வம். அது பொருட் செல்வமும் அருட்செல்வமுமாம். நுகர்வினை - நுகர் தொழில். அது உலக நெறிக்காயின் பொருளீட்டல் முதலாயின. வீட்டு நெறிக்காயின் அருளாகிய ஞானம் பெறுதல் முதலாயின.

செல்வம் உலகில் இருந்தால் மட்டும் போதாது. அதை நுகர்தற்கும் உயிர்களிட-தது ஈட்டல் முதலான தொழில் வேண்டும். அதனால் இறையருள் உயிர்களுக்குச் செல்வமாயும், அச்செல்வத்தை நுகர்தற்கு அதனை ஈட்டல் முதலான தொழிலாயும் வந்து கூடிற்று என்ற கருத்தால் அருளே உயிர்களுக்குப் "பெருக்கமும் நுகர்வினைனயுமாம்" என்று கூறினார். இவ்வாறே ஆசிரியர் மெய்கண்டாரும் இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையாலே வரும் என்று கூறி, ஒரு நகரியைக் காப்பான் பாடி காவலிட்டாங்கு அவை அவனது ஆக்கினையாகலான் என்றொரு விளக்கமும் தந்தார்.

இதனால் அருள் உயிர்கட்கு உபகாரப்படும் முறைமை கூறப்பட்டது.

3. ஊனறியா தென்று முயிரறியா தொன்றுமிவை
தானறியா தாரறிவார் தான்

இது அனைத்தையும் அறிவதும் அறிவிக்க வல்லதும் அருளேயன்றிப் பிறிது இல்லை என்கின்றது.

கண்ணழிவு:- ஊன் என்றும் அறியாது. உயிர் ஒன்றும் அறியாது. இவைதான் - இவைதாம் அறியாது ஆயின் வேறு ஆர்தான் அறிவார் என்பது

பொழிப்புரை:- உடம்பு சடம் ஆதலின் அது என்றுமே அறியாது. உயிர் சித்து ஆயினும் அது அறிவிக்க அறியுமதுவன்றித் தானே அறியாது. இவை யிரண்டுமே இவ்வாறு அறியாதாயின் வேறுயார்தாம் அறிவார் - திருவருள் ஒன்றே அறியும் என்றபடியாம்.

திருவருள் ஒன்றே அறியும் என்பது இங்குச் சொல்லெச்சம். அறிவிக்கவன்றி அறியாவுளங்கள் என்றார் ஆசிரியர் மெய்கண்டாரும்.

அறிவதாகிய திருவருள் ஆன்மாக்களுக்கு அறிவிக்கவும் வல்லதாம் என்றவாறு.

ஆகவே முப்பொருளில் ஒன்றாகிய உடம்பு அதாவது பாசம் என்றுமே அறியாதது. பசுவாகிய உயிர் அறிவித்தாலன்றி அறியாதது. பதியாகிய இறை ஒன்றுமே தானே அறிவதுடன் அறிவிக்கவும் வல்லதாம் என்றபடியாம்.

இவை தான் அறியாதாயின் என்புழி ஆயின் என ஒரு சொல் வருவிக்க.

4. பாலாழி மீனாளும் பான்மைத் தருளுயிர்கள்
மாலாழி யாளும் மறித்து

இது உயிர்கட்கு அருளின் எளிவந்த தன்மை கூறுகின்றது.

கண்ணழிவு:- அருளாழியிற் கிடந்த உயிர்கள் அருளைப் புசியாமல் மறித்து மால் ஆளும் தன்மையானது பால் ஆழியை மீன் ஒன்று ஆளும் பான்மைத்து என்பது

பொழிப்புரை:- இறைவனது அருளே உலகெங்கும் வியாபித்து நிற்றலின் அந்த அருளாழியில் வியாப்பியப் பொருளாய்க் கிடந்த உயிர்கள் அருளைப் புசியாமல் அதனை மறுத்து உலகையே புசித்து மேலும் மேலும் மயங்கிக் கிடக்கும் தன்மையானது பாற்கடலை மீன் ஒன்று ஆளும் பான்மைத்து என்றவாறு.

மச்சாவதார முடைய திருமாலானவன் திருப்பாற் கடலை வாழிடமாகக் கொண்டிருந்தும், அங்குள்ள பாலையருந்திப் பசியாறாமல் மாலுற்று உறங்கியே காலம் போக்கினாற்போல இறைவனது அருளாழியிற் கிடந்த உயிர்களும் அருளைப் பருகி இன்புறாமல் உலகின்பத்தி லாழ்ந்து மாலுற்று மயங்கிக் கிடந்தனவே, என்னபாவமிது என இரங்கிக் கூறியது இது.

இது திருமால் பாற்கடலில் பள்ளி கொண்டிருந்த வரலாற்றைத் தழுவியெழுந்தது.

5. அணுகு துணையறியா வாற்றோனி லைந்தும்
உணர்வை உணரா துயிர்.

இது திருவருளது உணர்த்தும் உபகாரம் கூறுகின்றது.

கண்ணழிவு:- ஆற்றோனில் - வலியில்லாதான் ஒருவனிடத்தில் அருகு துணை அறியா ஐந்தும் போல் உயிர் உணர்வை உணரா என்பது.

பொழிப்புரை:- வீட்டுநெறியில் செல்லும் வலியில்லாதானாகிய சகலன் ஒருவனிடத்து ஐம்பொறிகளும் தமக்கு நெருங்கிய துணையாயிருந் துணர்த்துகின்ற ஆன்மாவை அறியாதாற்போல ஆன்மாவும் தன் உணர்வில் உணர்வாய் நின்று உணர்த்துகின்ற திருவருளை அறியமாட்டாதாம் என்றவாறு.

பெத்த காலத்தில் ஆன்மாவால் விடயங்களை அறிகின்ற ஐம்பொறிகள் ஆன்மாவை அறியாவாறு போலத் தம் உணர்வில் நின்று உணர்த்துகின்ற தம் முதல்வனது அருள் உபகாரத்தை அவ்வான்மாக்களும் உணரமாட்டாவாம். முத்திக் காலமாயின் அவ்வாறு உணர்த்துகின்ற திருவருளை அவ்வாண்மாக்கள் ஒருதலையாக உணரும் எனவும் அறியலாம். இது முதனூலில் ஐந்தாம் சூத்திரத்தால் உணர்த்தப்பட்டது. அது

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்து அறிந்து அறியா ஆங்கவை போலத்
தாம் தம் உணர்வின் தமியருள்
காந்தம் கண்ட பாசாசத் தவையே என்பது

ஆற்றான் என்பது செய்யுளாதலின் ஆற்றோன் என நின்றது. "ஆ. ஓ ஆதலும் செய்யுளுள் உரித்தே" என்பது விதி. வலியில்லாதான் என்ற பொருளைத் தருவது. அதாவது துறவறத்தில் நிற்றற்குரிய வலியில்லாதவன் என்பதாம்.

"ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்" எனவரும் திருக்குறளிலும் ஆற்றுதல் என்பது அப்பொருட்டாதல் தெளிக.

ஆற்றோனில் என்பதற்குப் பலரும் பலவாறு உரைத்தனர். அவையெல்லாம் பொருந்துமேற் கொள்க.

6. தரையை யறியாது தாமே திரிவார்
புரைய வுணரா புவி.

இது உலகிற்கும் தாரகமாய் நின்றது திருவருளே என்கின்றது.

கண்ணழிவு:- தரையை அறியாது தாமே திரிவார் புரைய புவி-புவிக்ண் உள்ள ஆன்மாக்கள் உணரா என்பது

பொழிப்புரை:- தம்மைத் தாங்கி நிற்கின்ற தரையே தமக்கு ஆதாரமென்று அறியாமல் தமக்குத் தாமே ஆதாரமென்று கருதி அத்தரை மீதே நடந்து திரிகின்றார் சிலரைப்போல உலகையே உணர்ந்து உலகையே சார்ந்து உலகின் கண்ணே வாழ்ந்து வருகின்ற பெத்த காலத் தான்மாக்கள் பலவும் அவ்வுலகிற்கும் ஆதாரமாயுள்ள திருவருளை உணரமாட்டாவாம் என்றவாறு.

முத்திக் காலத் தான்மாக்களாயின் அவர் அவ்வுலகைப் புறக்கணித்து அவ்வுலகிற்கும் ஆதாரமாய் விளங்கும் திருவருளையே உணர்ந்துள வாழ்வர் என்பதும் இதனால் உணரப்பட்டது.

புவி - ஆகுபெயர்.

7. மலைகெடுத்தோர் மண்கெடுத்தோர் வான்கெடுத்தோர் ஞானந்
தலைகெடுத்தோர் தற்கேடர் தாம்.

இதுவுமது.

கண்ணழிவு:- மலை கெடுத்தோர் மண்கெடுத்தோர் வான்கெடுத்தோர் போல ஞானம் தலைகெடுத்தோர் - கெடுத்தோரும் தற்கேடர்தாம் என்பது.

பொழிப்புரை:- மலையில் நின்றே மலையைத் தேடுவாரும், பூமியில் நின்றே பூமியைத் தேடுவாரும், வானவெளியில் நின்றே வானைத் தேடுவாரும் போலத் திருவருளில் நின்றே அதனினும் மேலான ஒன்று இருப்பதாக நினைந்து அதனை உலகில் தேடிக் கொண்டிருக்கின்ற சகலர் தாமும் தம்மைத் தாம் அறியாதவரே என்றவாறு.

தம்மைத் தாம் அறிவராயின் தம்முள் இருந்த தலைவனையும் அறிந்து அவனருளில் மூழ்கி இன்புற்றிருப்பர் என்றவாறாம்.

இங்குச் சகலர் என்றது மும்மலங்களும் உடையராய் உலகை உணர்ந்து உலகையே சார்ந்து வாழும் பெத்தான்மாக்களைக் குறித்துச் சொல்லியது. அவர்தாமும் உலகெங்கணும் வியாபித்திரா; நின்ற திருவருளில் நின்றேயும் அதனைச் சிறிதேனும் உணராராய்ப் பொருளே தலையாயது என்று கருதி அதனை உலகில் பலவழியானும் தேடி ஆரா வியற்கையராய் அலைந்து திரிவர் என்றவாறாம்.

8. வெள்ளத்து ணாவற்றி எங்கும் விடிந்திருளாம்
கள்ளத் தலைவர் கடன்.

இது அருளை நினைந்து வீட்டு நெறிக்கண் செல்லாராய்ப் புலன் வழியொழுகும் பெத்த நிலையினரை அறிவுறுத்துகின்றது.

கண்ணழிவு:- கள்ளத்து அலைவர் - அலைவார்க்கு வெள்ளத்துள் நாவற்றி எங்கும் விடிந்து - விடிந்தும் இருள் - இருளாய்த் தோன்றல் கடன் ஆம்.

பொழிப்புரை:- வீட்டு நெறிக்கண் சென்று அருளை நினையராய் உலகநெறிக்கண் நின்று வஞ்சப் புலன்வழியொழுகும் மாந்தர்க்கு வெள்ளத்துள் நீந்தும் போது தாகத்தால் நாவுலர்ந்து வருந்தலும் எங்கும் விடிந்த பின்னும் இருளாய்த் தோன்றலும் இயல்பான அனுபவங்களாம் என்றவாறு.

என்றது அவர் அறிவும் பொறியும் அற்றவர் என்றவாறாம்.

வெள்ளத்துள் நீந்தும்போது தாகத்தால் நாவுலர்ந்து போதல் அறிவில்லாத மூடர்க்கு நிகழும் அனுபவமாம். எங்கும் விடிந்த பின்னும் இருளாய்த் தோன்றல் கட்பொறியிழந்த குருடர்க்கு நிகழும் அனுபவமாம். அந்த இரண்டு அனுபவங்களும் வஞ்சப் புலன்வழி யொழுகும் மாந்தர்க்கு நிகழும் அனுபவங்களாம் என்றதால் அவர் மூடராதலே யன்றிக் குருடருமாயினார் என்றதாம். அவரே அறிவும் பொறியும் இழந்தவர் என்பது ஆசிரியர் கருத்தாம்.

கள்ளத்து அலைவர் எனப் பிரித்துப் பெத்த நிலைக் கண் நின்றவர் என்னும் பொருள் தோன்ற உரைத்துக் கொள்க. அலைவர் என்புழி நான்கனுருபு விரிக்க.

இருளாம் என்புழிவந்த ஆம் என்ற சொல்லைக் கடனாம் எனவும் கூட்டி உரைக்க.

உலகெங்கும் வியாபகமாய்ச் சூழ்ந்துள்ள இறையருளே நினைந்து வீட்டு நெறிக்கண் செல்லாராய் இருளில் புலன்வழியே ஒழுகித் திரிகின்ற பெத்த நிலையினரைச் சற்றே கடிந்து அறிவுறுத்தியது இந்த அருமைத் திருவருட்பா

9. பரப்பமைந்து கேண்மினிது பாற்கலன்மேற் பூசை
கப்பருந்த நாடுங் கடன்

இதுவும் பெத்த நிலையினர் அருளை மறந்து உலகை நேசித்தல் ஏனோ என்கின்றது.

கண்ணழிவு:- இது - அருளில் வாழும் ஆன்மாக்கள் அருளைப் புசிக்க நினையாமல் உலகைப் புசிக்க விரும்புவதான இது பாற்கலன்மேல் உள்ள பூசை பாலைப் பருக நினையாமல் இறப்பில் ஓடுகின்ற கரப்பு - கரப்பினை அருந்த நாடும் கடன் - செயலினைப் போன்றதாம். இதனை பரப்பு அமைந்து கேண்மின் என்பது.

பொழிப்புரை:- எங்கும் நீக்கமற நிறைந்து விளங்கும் இறைவனது திருவருளிலே வாழ்ந்துவரும் ஆன்மாக்கள் அவ்வருளைப் புசிக்க நினையாமல் கண்ணெதிரே கண்ட உலகையே புசிக்க விரும்புவதான இந்தச் செயலானது, பாற்குடத்தின்மேல் உள்ள பூனையொன்று அந்தப் பாலைப் பருக நினையாமல் எதிரே இறப்பில் ஓடுகின்ற காரெலியைப் பிடித்துத் தின்ன அதன்மேல் வேகமாகத் தாவும் செயலினைப் போன்றதாம். இதனை அமைதியாகக் கேட்டு இறையருளுக்குத் திரும்புவீர் உலகீர் என்றவாறு.

பரபரப்பு எனற்பாலது இங்குப் பரப்பென நின்றது. இரட்டைக் கிளவி யிரட்டிற் பிரிந்திசை யாவாயினும் செய்யுளாதலின் எதுகை நோக்கி அவ்வாறு நின்றது.

இது கடன் என முடிக்க. முடித்துக் கடனைப் போன்றது எனவுரைக்க.

பாற்கலன் உறியில் இருந்தது. அதன்மேற் பூனை இருந்தது. கரப்பு இறப்பில் ஓடியது. கரப்பினைப் பற்றப் பூனை தாவியதால் பாற்கலனும் உடைந்து, பாலும் வீணாகி நாடிய கரப்பும் கிடைக்காமற்போனது என்றொரு நயமும் காண்பர். ஆனால் அது ஈண்டைக்கு வேண்டாதது. அதுபாலைப் பருகவேண்டும் என்பதுதான் ஆசிரியர்க்குக் கருத்தேயன்றிக் கரப்பினை அருந்தவேண்டும் என்பது அவர்க்குக் கருத்தன்றாதலின்.

கடன் - முறைமை; இங்குச் செயலைக் குறித்தது.

கரப்பு - காரெலி. கரப்பான் பூச்சி யெனவும் உரைகாண்பர் சிலர். அது அதன் வயிற்றுப் பசிக்குப் போதாதாகலின் அவ்வுரை வலியுடைத்தன்று.

பரப்பு - பரபரப்பு - விரைவு. பரப்பமைந்து கேண்மின் என்றதால் சாத்திர நூல் பாடங்கேட்டற்கண் பொறுமை வேண்டும் என்பதாயிற்று.

"பரபரக்க வேண்டாம் பலகாலும் சொன்னேன்" எனவும் "பரப்பற - பப்பற வீட்டிருந்துணரும் நின்னடியார்" என்வும் இங்குச் சிலவுரைகளில் எடுத்துக் காட்டப்படும் மேற்கோள்கள் மிகவும் பொருத்த முடையன.

கேண்மினிது என்றதைக் கேண்ம் இனிது என்று கண்ணழித் துரைத்தல் ஏற்புடையதே. ஆனால் அவாறுரைப்பின் பாட்டில் எழுவாய்வற்றும்.

10. இற்றைவரை யியைந்தும் ஏதும் பழக்கமிலா
வெற்றுயிர்க்கு வீடு மிகை.

இதுவுமது.

கண்ணழிவு:- இற்றை - நாள் - வரை இயைந்தும் பழக்கம் ஏதும் இலா வெற்றுயிர்க்கு வீடும் மிகை என்பது

பொழிப்புரை:- கேவல நிலையிலிருந்து விடுபட்டு ஓரறிவில் தொடங்கி ஆறறிவுவரைப் பலகோடி பிறவிகளில் உழன்று இறையருளையே ஆதாரமாய்க் கொண்டு இன்று நாள் வரை வாழ்ந்து வந்தும் அந்த அருளைச் சிறிய் அளவிலேனும் பழகிக் கொள்ளாத சகலநிலையில் உள்ள வறிதாகிய உயிர்களுக்கு இனி வீடும் வேண்டாத ஒன்றேயாம் போலும் என்றவாறு.

வேண்டியிருப்பின் அவை சிறிதேனும் அருளில் நாட்டம் கொண்டிருக்கும். அஃதில்லையே என்றபடியாம்.

இது அருளைப் புறக்கணித்து வாழும் பெத்த நிலை ஆன்மாக்களைக் குறித்து ஆசிரியர் இரங்கிக் கூறியதென வுணர்க.

இற்றைவரை என்றதால் ஓரறிவில் தொடங்கி என்று உரைக்கப்பட்டது. அன்று தொட்டு இன்றுவரை அந்த உயிர் இறையருளோடு இசைந்தே வாழ்ந்து வந்தது என்றபடியாம்.

ஏதும் – சிறிதும். ஏதும் பழக்கமிலா உயிர் என்றது அருளாலே வாழ்ந்து வந்தும் அருளைப் பழகிக் கொள்ளாத உயிர் என்றதாம்.

நிலையாத பொருளை நேசித்து நிலையான அருளைக் கைவிட்டமையின் வெற்றுயிர் என்றார்.

வீடும் என்பதில் உள்ள உம்மை உயர்வு சிறப்பு.

இந்த அதிகாரத்தில் இது காறும் அருளினது தன்மையைக் கூறவந்த ஆசிரியர் பெத்த நிலையில்உள்ள ஆன்மாக்களின் சிறுமை கூறும் முகத்தால் அருளினது பெருமையே விளங்கக் கூறினார். இனி அந்த அருள் ஞானத்தை அந்தப் பெத்த நிலையில் பக்குவப்பட்டிருந்த ஆன்மாக்களுக்கு வலியவே வந்து உணர்த்த வருகின்ற ஞானாசிரியனது பெருமைகளை அடுத்து வரும் அதிகாரத்தால் கூறுவார் ஆசிரியர். அங்கு அந்த ஞானாசிரியனை "அருளுரு" வென்றே ஆசிரியர் குறிப்பார்.

**நான்காமதிகாரம் முற்றியது.**

## ஐந்தாம் அதிகாரம்

## அருளுரு நிலை

அஃதாவது பெத்த காலத்துப் பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு இறைவன் தனது அருளுருக் காட்டி ஞானத்தை உணர்த்தி ஆட்கொள்ளும் முறைமை கூறுவது. அவரைச் சாத்திர நூல்கள் குருவேடத்தார் எனவும், தோத்திர நூல்கள் திருவேடத்தார் எனவும் கூறின. "தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தும்" என்பது சிவஞான போதம்." அருவும் உருவும் அறிஞர்க்கறிவாம் உருவுமுடையான் உளன்" என்று இந்நூலாசிரியர் கூறினவிடத்து. இறைவனது உருவத் திருமேனியே இங்கு அருளுரு எனப்பட்டது. மேல் அருளின் சிறப்புக் கூறினார். இங்கு அதனை உணர்த்தவரும் அருளுருவின் சிறப்புக் கூறுகின்றாராதலின் மேலதனோடு இது தொடர்பு உடையதாயிற்று.

1. அறியாமை யுண்ணின் றளித்ததே காணுங்
குறியாகி நீங்காத கோ.

இது பெத்த காலத்தில் உள்நின்று உணர்த்திய பதிப்பொருளே முத்திக் காலத்தில் குருவாயும் வந்து உணர்த்தும் என்கின்றது.

கண்ணழிவு:- பெத்த காலத்தில் ஆன்மாக்கள் அறியாமை உள் நின்று அளித்ததுவே முத்திக் காலத்தில் அவை காணும் குறி ஆகி நீங்காத கோவுமாய் நின்றது என்பது

பொழிப்புரை:- பெத்த காலத்தில் ஆன்மாக்கள் அறியாதவாறு அவற்றின் அறிவினுள் அறிவாய் நின்று உணர்த்தி வந்த பதிப்பொருளே அவற்றின் முத்திக் காலத்தில் அவை தம் கண்களான் கண்டு உணரும் மானுட வுருவந்தாங்கி வந்தும் உணர்த்தி அவற்றது அறிவை விட்டு நீங்காத தலைமைப் பொருளாயும் நின்றது என்றவாறு.

எனவே அங்ஙனம் குருவாகி வந்த உருவே இங்கு அருளுரு என்றதாம்.

ஆன்மாக்களின் முத்திக் காலத்தில் பதிப்பொருளாகிய இறைவன் குருவாயும் வந்து உணர்த்துவன் என்பது சாத்திர மரபு. அது "ஐம்புல வேடரின்

அயர்ந்தனை வளர்ந்தெனத் தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தும்" என முதனூலில் எட்டாம் சூத்திரத்தில் ஆசிரியர் மெய்கண்டார் கூறியது கொண்டும் உணரப்பட்டது.

பெத்த காலத்தில் உணர்த்தியது ஆன்மாக்கள் உணராவாறு ஒளிந்து நின்று உணர்த்தியது. அதனாற்றான் அங்கு உணர்த்த வுணர்ந்த ஆன்மாக்கள் உணர்த்திய தலைவனை உணராது உலகை உணர்ந்து உலகையே சார்ந்து வாழ்ந்தன. முத்திக் காலத்தில் உணர்த்துவது. அவை உணருமாறு குருவடிவாயும் வந்து உணர்த்துவது. அதனால் இங்கு உணர்த்த உணரும் ஆன்மாக்கள் இறைவனையே உணர்ந்து இறைவனையே சார்ந்து வாழத் தலைப்படுவன. ஆன்மாக்கள் உலகைச் சார்ந்து வாழ்ந்த காலம் பெத்த காலம் எனவும், இறையைச் சார்ந்து வாழும் காலம் முத்திகாலம் எனவும் உணரவேண்டும்.

ஆன்மாக்கள் பெத்த காலத்தில் இருந்தபோது அவற்றுக்கு மாயையால் உணர்த்தப்பட்ட கலை முதலான அறிவு தத்துவங்கள் வாயிலாக இறைவன் ஒளிந்து நின்றே உணர்த்துவான். அதனால் அவை உலகைச் சார்ந்து நின்றவாறே தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகப் பெற்றுச் சரியை கிரியை யோகமாகிய நற்றவங்களைச் செய்து பழகும். அத்ததவப் பயனால் அவை நற்குடிக்கண் வந்து பிறக்கும். அங்கு அவற்றுக்கு அத்தவப் பயனால் இன்பத் துன்பங்களைச் சமமாகக் கருதும் சமனிலை உணர்வும் வாய்க்கும். அதுதான் அவவ்வான்மாக்களுக்குப் பக்குவ நிலையாகும். அந்த நிலையினை உணர்ந்த முதல்வன் அங்குக் குருவாகி விரைய வந்து அவ்வான்மாக்களை உணர்த்தி விடுவான் என்று சாத்திரங்கள் கூறும். அதன் பிறகே அவ்வான்மாக்களுக்குச் சகல நிலை கழிந்து சுத்த நிலை தொடங்கும். பெத்த நிலை மாறி முத்தி நிலை தொடங்கும் எனவும் அதனைச் சொல்லிக் கொள்ளலாம். இந்த உண்மைகளை எல்லாம் ஆசிரியர் மெய்கண்டார் "தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு அந்நிய மின்மையின் அரன்கழல் செலுமே" என இரண்டே அடிகளால் கூறியொழிந்தார். இந்த அதிகாரம் தொடங்கி ஆசிரியர் இனி முத்தி நிலையே கூறுவார்.

2. அகத்துறு நோய்க் குள்ளின ரன்றி யதனைச்
சகத்தவருங் காண்பரோ தான்

இது பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு உற்ற பிறவி நோயினை அவற்றுக்குள்ளிருந்த முதல்வனே அறிந்துவந்து தீர்ப்பான் என்கின்றது.

கண்ணழிவு:- அகத்து உறும் நோய்க்கு - நோயினை - உள்ளினர் காண்பரே அன்றி அதனை சகத்தவரும் காண்பரோ -காணார் என்பது.

பொழிப்புரை:- உடம்பிற்கு வந்த வாதம் முதலான நோயினை உடம்பிற்குள்ளிருந்த உயிர் அறிவதேயன்றி உலகத்தவர் பிறர் அறியார். அதுபோல உயிர்க்கு வந்த பிறவி நோயினை அவ்வுயிருக்குள்ளிருந்த முதல்வன் அறிவனேயன்றிச் சகத்தவர் பிறர் அறியார் என்றவாறு.

இது "ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்" என்பதுபோல உவமையும் பொருளும் ஒரு சொல்லில் வந்தன. அது தேனீக்கள் தேடிவைத்த தேனடையைத் தீப்பந்தமுடையார் கவர்ந்து கொள்வர். அதுபோல உலோபிகள் தேடிவைத்த செல்வத்தைக் கள்வர் முதலான தீயவர்கள் கவர்ந்து கொள்வர் எனச் சிலேடைப் பொருள் தந்தது.

அகத்துறுநோய் - உடம்பினகத்துற்ற வாதம் முதலான நோய், உயிரினகத் துற்ற பிறவிநோய். உள்ளினர் - உடம்பிற்குள் இருந்த உயிர், உயிருக்குள் இருந்த இறை.

பிறவிக் கடலில் உழன்று சலித்த உயிரின் பிறவி நோயினை அவ்வுயிருக்குள் உயிராயிருந்த முதல்வனே அறிந்து குருவாய் எழுந்தருளி வந்து தீர்ப்பான் என்பது இதற்குக் கருத்தாம்.

நோய்க்கு - நோயினை, வேற்றுமை மயக்கம், இரண்டன் பொருளில் நான்கனுருபு வந்து மயங்கிற்று.

உடம்பைப் பற்றி வருகின்ற வாதம் முதலான நோய்களை உடம்பிற்குள்ளிருந்த உயிர் அறிந்து தீர்ப்பதுபோல உயிரைப் பற்றி வருகின்ற பிறவி நோய்க்குக் காரணமான மாயாமல கன்மங்களை அவ்வுயிருக்கும் உயிராயிருந்த இறைவனே குருவடிவாய் வந்து ஒழிப்பன் என்பதுவே இந்த அருட்பாவால் உணர்த்தப்பட்டது. இவ்வாறு உணராது குருவாய் வந்ததும் சகத்தவரே எனக் கருதுதல் கூடாது என்பதற்காகவே "சகத்தவரும் காண்பரோ தான்" எனக் கூறினார் ஆசிரியர் என்று உணர்க. அதனால் குருவாய் வந்தது இறைவனே யன்றிச் சகத்தவர் ஆகார் என்பதும் இதனால் உணர்த்தப்பட்டதாம்.

3. அருளா வகையா லருள்புரிய வந்த
பொருளார் அறிவார் புவி.

இது பஞ்ச கிருத்தியங்களில் ஒன்றான அருளுருவைப் பக்குவமுடைய ஆன்மாக்களே பதியென அறிவர் என்கின்றது.

கண்ணழிவு:- அருள் ஆ - ஆம் வகையால் அருள் புரிய வந்த பொருள் - பொருளினை புவி - புவிக்கண் அறிவார் ஆர் என்பது

பொழிப்புரை:- இறைவனுடைய ஐந்தொழிற் கூறுகளில் இறுதிக் கண்ணதாகிய அருளல் என்னும் ஒரு கூறினால் பக்குவம் முதிர்ந்த ஆன்மாக்களுக்கு அருளைப் புரிய வந்த குருவாகிய பதிப்பொருளை அப்பக்குவமுடைய ஞானிகள் அறிவரே யன்றிப் புவியின்கண் உள்ளார் யார் அறிவார் - ஒருவரும் அறியார் என்றபடி.

இறைவனுடைய தொழில்கள் ஐந்தாவன, படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பன. இவற்றுள் முதல் மூன்றும் சகல நிலையில் உள்ள ஆன்மாக்களின் பொருட்டு நிகழ்வன. இறுதியிரண்டும் முத்தி நிலையில் உள்ள ஆன்மாக்களின் பொருட்டு நிகழ்பவை.

ஆன்மாக்களின் முத்திக்காலத்தில் அவை பக்குவம் பெறுந்துணையும் தன்னை அவற்றுக்கு மறைத்து நிற்பன் இறைவன். அவை பக்குவம் அடைந்து நின்றபொழுது அவற்றுக்குத் தன்னை உணர்த்தி அருள்புரிதற் பொருட்டுக் குருவாகி எழுந்தருளுவான் என்பது சாத்திர மரவு. அதனை உணர்த்தற்பொருட்டே அருள் ஆம் வகையால் அருள்புரிய வந்த பொருள் என்று அந்தக் குருவடிவைச் சிறப்பித்துக் கூறினார் ஆசிரியர்.

இந்த அருட்பாவினால் இறைவன் குருவாகி வருவது அவனது பஞ்ச கிருத்தியங்களில் ஒன்று என்பது உணர்த்தப்பட்டது.

அருள் ஆ வகையால் - அருளல் ஆகிய தொழிற்கூறுபாட்டால், ஆவகை என்பது வினைத்தொகை, அது ஆன, ஆகின்ற, ஆம் என விரியும். இங்கது ஆம் வகை என விரிந்தது.

4. பொய்யிருண்ட சிந்தைப் பொறியிலார் போதமாம்
மெய்யிரண்டுங் காணார் மிக.

இது இறைவனது அருளுருவே குருவுரு என்கின்றது.

கண்ணழிவு:- பொய் - பொய்யால் இருண்ட சிந்தை பொறியிலார் போதம் ஆம் மெய் ஆம் இரண்டும் மிக காணார் என்பது.

பொழிப்புரை:- பொய்யாகிய ஆணவமலத்தால் இருண்ட சிந்தையை யுடைய அறிவில்லாதார் இறைவனது அருளுருவும் குருவுருமாகிய இரண்டும் ஒன்றே என்பதனை ஒருதலையாக உணரார் என்றவாறு.

நில்லாதவற்றை நிலையின வென்றுணரும் மருள் உணர்வு மலத்தாலும் ஒரோ வழி உண்டாமாதலின் அதனைப் பொய் என்றார். பொறி ஈண்டு அறிவின் மேற்று. போதமும் மெய்யுமாகிய உருவிரண்டும் காணார் என்றது இரண்டும் ஒன்றெனக் காணார் என்றதாம். என்றதால் இறைவனது அருளுருவே குருவுருவாய் என்றபடியாம்.

போதம் – ஞானம். அது இங்கு அருளுருவைக் குறித்தது. மெய் என்றது மானுடச் சட்டை தாங்கி வந்த குருவுருவைக் குறித்தது.

பொறியிலார் காணார் என்றதால் பக்குவம் உடைய ஞானிகள் காண்பர் என்றவாறாம்.

5. பார்வையென மாக்களை முன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் காணார் புவி.

இது அருளுருவாகிய இறைவன் குருவுருத் தாங்கி வருதலின் இன்றியமையாமை கூறுகின்றது.

கண்ணழிவு:- மாக்களுக்கு முன்னால் நிறுத்தி மாக்களைப் பற்றிப் பிடித்தற்கு ஆம் பார்வை மிருகங்கள் என பக்குவம் வாய்ந்த ஆன்மாக்களைத் தன்வயப்படுத்த இறைவன் போர்த்தி வந்த மானுடப் போர்வையே இந்தக் குருவுருவம் என புவியில் உள்ளார் காணார் என்றதால் பக்குவம் வாய்ந்த ஞானிகள் அவ்வாறு காண்பர் என்றபடியாம்.

பொழிப்புரை:- வன விலங்குகளை அகப்படுத்த அவற்றுக்கு முன்னால் வேட்டுவர்கள் நிறுத்தும் பார்வை மிருகங்களைப்போல் இறைவன் பக்குவமுடைய ஆன்மாக்களைத் தன் வயப்படுத்தப் போர்த்தி வந்த மானுடப் போர்வையே குருவடிவம் என்பதைப் புவியில் உள்ளார் அறியமாட்டார்கள். ஆனால் ஞானிகள் அறிவர் என்றபடியாம்.

வேட்டுவர் காட்டில் திரியும் யானைகளைப் பிடிக்க ஒரு யானையைப் பழக்குவர். மான்களைப் பிடிக்க ஒரு மானைப் பழக்குவர். அவற்றுக்குப் பார்வை எனப்பெயர். அதைப் போலவே இறைவன் பக்குவமுடைய ஆன்மாக்களைத் தன் வயப்படுத்த மானுடப் போர்வை போர்த்து மானுட உருவில் வருவன். அது இங்குப் போர்வை எனப்பட்டது. அந்தப் போர்வைதான் இறைவனது குருவடிவம் என்பதை உலகத்தவர் அறியார். ஆனால் ஞானிகள் அறிவர் என்றே இந்த அருட்பா உணர்த்திற்று.

இதனால் அருளுருவாகிய இறைவன் குருவுருத் தாங்கி வருதலின் இன்றியமையாமை கூறப்பட்டது.

புவி - ஆகுபெயர் புவியில் உள்ளார் மேல் ஆகி வந்தது.

பார்வை எனவரும் போர்வை எனப் புவியில் உள்ளார் காணார் என முடிக்க, பார்வை எனவரும் போர்வை என்புழி என என்றது உவமவுருபு. அது தொல்காப்பியப் பொருளதிகாரத்து உவமவியலுள் “அவைதாம் அன்னஏய்ப்ப“ எனத் தொடங்கும் சூத்திரத்துள் எனவென்னெச்சம் பற்றி வருவனவும் உவமவுருபாம் என்று இலேகினாற் கொள்ளப்பட்டது. “தூதுணம் புறவெனத்துதைந்த நின் எழில் நலம்“ என்பது எடுத்துக்காட்டு.

6. எமக்கெ னெவனுக் கெவைதெரியு மவ்வத்
தமக்கவனை வேண்டத் தவிர்.

இது ஞானாசிரியனைத் தேடிக் காத்திருந் தேனும் பெறுக என்கின்றது.

கண்ணழிவு:- எமக்கு என் எவனுக்கு எவை தெரியும் அவ்வத் தமக்கு அவனை - அவ்வவனை வேண்ட தவிர் என்பது.

பொழிப்புரை:- எமக்கு என்ன வேண்டுமோ எவனுக்கு என்ன தெரியுமோ அவ்வவற்றிற்கு அவ்வவனை வேண்டிப் பெறுதலே அதுவதற்குப் பரிகாரமாம் என்றவாறு.

“குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடாம்
குறைவில் சகன் சூழ்கொள் வார்க்கு“
என்றார் ஆசிரியர் மெய்கண்டாரும்.

தவிர் என்பது முதனிலைத் தொழிற்பெயர் தவிர்தல் தீர்தல் என்பன ஒருபொருள் தரும் சொற்களாம். இங்குத் தவிர் என்பது தீர்வு என்ற பொருளைத் தந்தது.

இந்த அருட்பாவிற்குப் பலரும் பலவாறு உரைப்பர். அவருள் பேராசிரியர் திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள் உரைபாவிற்கு நெருங்கி வந்தது. அதனைத் தழுவியே நமது உரையும் இருந்தது.

சோதிடக் கலையைக் கற்க விரும்பினான் ஒருவன், அக்கலையில் வல்ல ஆசிரியன் ஒருவனை நாடலே அவற்குத் தீர்வாம். சிற்பக்கலையை விரும்பினான் ஒருவன். அக்கலையில் வல்ல ஆசிரியன் ஒருவனை அணுகுதலே அவற்குத் தீர்வாம். அதைப்போல் இறைப்பொருளில் நாட்டமுடையான் ஒருவன் அதனை முற்றுமாய்த் தெளிய வுணர்த்தவல்ல ஞானாசிரியன் ஒருவனைத் தேடிப்பெறுதலே அவற்குப் பரிகாரமாம். தகவிலார் கூறும் வெற்றுரைகளால் தாகம் அடங்காதாகலின் அத்தகவுடையாரை அவன் காத்திருந்தேனும் பெறக்கடவனாம். அதனால் வீடுபேற்றில் வேட்கை யுடையான் ஒருவன் அதனைக் குருவாகி வந்து உணர்த்தவல்ல உலகமுதல்வனை நாடி நிற்றலே அவற்குத் தீர்வாம் என்ற கருத்தில் அவ்வத் தமக்கு அவ்வவனை வேண்டத் தவிர்தல் ஆம் என்று ஆசிரியர் கூறினார்.

இந்த அருட்பாத் தன்மை நவிற்சியாக வந்தது.

ஆசிரியர் மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம் என்ற முதனூலில் எட்டாஞ் சூத்திரத்திரண்டா மதிகரணத் திரண்டாவதாக வந்த உரைப்பாட்டு இந்த அருட்பாவினைத் தீரவுணர்தற்கு அரண் செய்வதாம். அது.

அறிவிக்க வன்றி அறியா வுளங்கள்
செறியுமாம் முன்பின் வினைகள் நெறியின்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடாம்
குறைவில் சகன் சூழ்கொள் வார்க்கு.

எனவரும் அந்த உரைப்பாட்டிற்கு யாம் எழுதிய விளக்கவுரையினையும் இங்குத் தெளிய வுணர்தல் தக்கதாம். அதனைச் "சிவஞான போதமும் விளக்கவுரையும் என்ற நூலிற் காண்க.

"எமக்கு என், எவனுக்கு எவை தெரியும் என வோர்ந்து" என ஒருசொல் வருவித்துக்கொள்க. பிறகு "எமக்கு என்ன வேண்டுமோ, எவனுக்கு என்ன தெரியுமோ என ஆராய்ந்தறிந்து" என்று உரைத்துக்கொள்க. "அவ்வத் தமக்கு" என்றது "அவ்வவற்றிற்கு" என்ற பொருள் தருவதாம். "அவனை" என்பதற்கு "அவ்வவனை" எனப் பொருள் உரைத்துக் கொள்க. தவிர் என்பது முதனிலைத் தொழிற்பெயர். தவிர்தல் விடல் தீர்தல் என்பனவெல்லாம் ஒருபொருள் தரும் சொற்களாம். ஆதலின் தவிர் என்பதற்குத் தீர்வு என்ற பொருள் கிடைப்பதாம். தீர்வாம் – பரிகாரமாம். தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட்டாகும் எனவரும் தொல்காப்பிய வுரியியற் சூத்திரத்தையும் இங்கு உய்த்துணர்ந்து கொள்க.

இந்த அருட்பாவால் ஞானாசிரியனைக் காத்திருந்தேனும் தேடிப்பெறுக என்பது கூறப்பட்டது.

7. விடநகில மேவினுமெய்ப் பாவகனின் மீளுங்
கடனிலிருள் போவதிவன் கண்.

இரு ஞானாசிரியன் பார்வையாலே ஆணவமலம் நீங்கும் என்கிறது.

கண்ணழிவு:- நகிலம் மேவினும் மீளாத விடம் மெய்ப்பாவகனில் மீளும் கடனில் இவன் கண்ணில் இருள் போவதாம் என்பது.

பொழிப்புரை:- கீரியே வந்து அடுத்தாலும் நீங்காத பாம்பின் விடமானது உண்மையான பாவகன் ஒருவனாலே நீங்குவதாம். அந்த முறைமைபோல இந்த ஞானாசிரியனது பார்வை பட்ட மாத்திரத்தே வீடுபேற்றில் நாட்டமுடையான் ஒருவனுக்கு மலவிருள் கெட்டொழிவதாம் என்றவாறு.

ஒருவன் உடலில் தீண்டப்பட்ட பாம்பின் விடம் பாம்புக்குப் பகையான கீரியே வந்தாலும் நீங்காது. ஆனால் உண்மையான பாகவன் ஒருவன் அங்கு நெருங்கிய மாத்திரத்தே அந்தவிடம் தானாக நீங்கும் என்பது ஆகமங்களின் கூற்று. அதைப்போல அருட் குரவனது பார்வை பட்ட மாத்திரத்தே வீடுபேற்றில் நாட்டமுடையான் ஒருவனது மலவிருள் கெட்டொழியும் என்று இங்குச் சொல்லப்பட்டது.

பாவகனது தன்மை கருடோகம் பாவனையில் கூறப்பட்டது. அது வருமாறு:

கருடன் என்பது ஆதி பௌதிக கருடன் என்றும் ஆதி தெய்விக கருடன் என்றும் ஆதி ஆத்மிக கருடன் என்றும் முத்திறப்படும். அவையாவன:- உலகில் இப்பொழுது சஞ்சரிக்கும் பறவையாகிய கருடன் ஆதி பௌதிக கருடன் எனப்படும். அதனை உணர்த்துகின்ற அக்கர ரூபமாகிய மந்திரமே ஆதி தெய்விக கருடன் ஆம். மந்திரத்தை அதிட்டித்து நின்று மாந்திரிகனுக்குப் பலன் கொடுக்கின்ற அருட் சத்தியே ஆதியாத்மிக கருடனாம். பாவகன் கருட மந்திரத்தை நாள்தோறும் உச்சரித்துத்தானே அக்கருடனாம் என்று பாவகம் செய்து வருவானானால் அவனிடத்தில் ஆதியாத்மிக கருட சத்தி நிலையாகப் பதிந்துவிடும். அது வேண்டுங்காலத்துப் பயன்தரும். அந்தப் பாவகன் தன் பார்வையினாலே விடத்தின் வேகத்தையும் கெடுக்கும் ஆற்றல் பெற்றோனாவன். இவ்வாறு சருவஞ் ஞானோத்தரம் முதலான ஆகமங்களில் சொல்லப்பட்டது.

மேலும் இந்தக் கருடனுக்கே யன்றி உலகில் உள்ள ஏனைய பறவை விலங்கு மரம் முதலிய பௌதிகப் பொருள்கள் அனைத்திற்கும் மந்திரங்கள் உளவென்றும் அவற்றிற்கெல்லாம் பலன்கொடுப்பது அவற்றை அதிட்டித்து நின்ற சிவசத்தியே என்றும் அந்த ஆகமங்கள் மேலும் சொல்கின்றன.

கடனில் என்புழி இன் உவமவுருபு அது இங்கு இல் எனத் திரிந்து நின்றது.

இவன் என்பது அதிகாரத்தால் அருட்குரவனைக் குறித்தது.

கண் ஆகுபெயர், பார்வைக்கு ஆகிவந்தது. "ஐயும் கண்ணும் அல்லாப் பொருள்வயின் மெய்யுருபு தொகா விறுதியான " என்பது விதியாகலான், பார்வையில் இருள் நீங்கும் எனவுரைக்க, பார்வையில் - பார்வை பட்ட மாத்திரத்தில்.

பார்வையில் மலம் போக்குதலை நயனதீக்கை என்பர் சாத்திர நூலார்.

இது அருட் குரவனது பார்வைக்குள்ள சிறப்புக் கூறியது.

8. அகலத் தருமருளை ஆக்கும்வினை நீக்குஞ்
சகலர்க்கு வந்தருளுந் தான்.

இது மூவகை ஆன்ம வருக்கத் தார்க்கும் இறைவன் ஞானத்தை உணர்த்தும் முறைமை கூறுகின்றது.

கண்ணழிவு:-ஒரு மலம் உடையார்க்கு அம்மலம் அகல அருளை தரும். இருமலம் உடையார்க்கு மலத்தோடு வினையும் நீக்கும் ஞானமும் ஆக்கும். சகலர்க்கு குருவாய் வந்து ஞானத்தை அருளும். தான் - அசை.

பொழிப்புரை : ஒருமலம் உடைய விஞ்ஞானாகலர்க்கு முதல்வன் அவர் உள் நின்றவாறே அவர்தம் மலம்கெட ஞானத்தை உணர்த்துவான். இருமலமுடைய பிரளயாகலர்க்கு அவர் முன் தேவவடிவிற் குருவாய் வந்து மலத்தோடு வினையும் கெடுத்து ஞானத்தை உணர்த்துவான். மும்மலம் உடைய சகலர்க்கு அவர் நினைந்த மானுட வடிவிற் குருவாய் வந்து மும்மலங்களையும் கெடுத்து ஞானத்தை உணர்த்துவான் என்றவாறு.

மூவகை வருக்கத் தாருள் சகலரை எடுத்து மொழிந்ததால் ஏனை யிருவரும் உணரப்பட்டனர்.

இது முதநூலிற் கூறியாங்கு உரைக்கப்பட்டது. அது.

மெய்ஞ்ஞானந் தானே விளையும் விஞ்ஞான கலர்க்
கஞ்ஞான வச் சகலர்க் கக்குருவாய் மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மந்தப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான் குருவாய் முன்

எனவரும்.

9. ஆரறிவா லெல்லா மகன்ற நெறியருளும்
பேரறிவான் வாராத பின்

இது இறைவன் குருவாய் வந்து உணர்த்தினாலன்றி இறை ஞனத்தை ஒருவரும் உணரார் என்கின்றது.

கண்ணழிவு:- எல்லாம் அகன்ற வீட்டுநெறியினை அருளும் பேரறிவான் வாராத பின் அறிவார் ஆர் என்பது.

பொழிப்புரை:- வாக்கு மனம் ஆகிய எல்லாவற்றையும் கடந்து நின்ற வீட்டு நெறியினைத் தானே வலியக் குருவாகி வந்து அருளவல்ல பேரறிவாளனாகிய பெருமான் அவ்வாறு வந்து அருளாதபோது அதனைத் தாமாக அறிபவர்தாம் யாரோ - ஒருவரும் இல்லை என்றபடியாம்.

வீட்டு நெறியானது வாக்கு மனங்கட்கு எட்டாத நெறியாகலான் அது "எல்லாம் அகன்ற நெறி" எனப்பட்டது. எல்ாவற்றையும் கடந்த நெறியே அது என்பதாம். "சொற்பதத்தார் சொற்பதமும் கடந்து நின்ற சொலற்கரிய சூழலாய்" என்று அப்பரால் குறிக்கப்பட்டதும் அதுவே. அதனைக் குருவாகி வந்து உணர்த்த வல்லவன் ஒருவனே. அவனே பதிப்பொருளாம் என்பது. அவனைத் தவிர்ந்த உயிர்கள் எல்லாம் அறிவிக்கவன்றி அறியாவாகலின் அவைதாமே அறியும் தகவுடையனவல்லவென்பது இதன் கருத்தாம்.

10. ஞான மிவனொழிய நண்ணியிடும் நற்கலனல்
பானு வொழியப் படின்.

இதுவுமது.

கண்ணழிவு:- நல்ல கல் (சூரிய காந்தக்கல்) பானு ஒழிய அனல்படின் ஆன்மாக்களுக்கு இவன் ஒழிய ஞானம் நண்ணியிடும் என்பது.

பொழிப்புரை:- சிறந்த சூரிய காந்தக் கல்லினிடத்துச் சூரியனைத் தவிர்ந்து நெருப்புத் தோன்றுமாயின் வீட்டு நெறியில் வேட்கையுடைய ஆன்மாக்களுக்கு இந்த அருட்குரவனை யின்றியும் ஞானம் தோன்றும் என்றவாறாம்.

ஆகவே அருட்குரவனையின்றி ஆன்மாக்களுக்கு ஒருவாற்றானும் ஞானம் தோன்றாது என்பதேபெற்றாம்.

உவமைக் கண் நற்கல் என்றமையால் பொருட்கண் வீட்டு நெறியில் நாட்டமுடைய ஆன்மாக்கள் என்று உரைக்கப்பட்டது. படவே வேறு கல்லில் பானுவிருந்தும் அனல் தோன்றாதாற் போலப் பக்குவமில்லாத ஆன்மாக்களுக்கு அருட்குரவன் இருந்தும் ஞானம் தோன்றாது என்பதும் இதனாற் பெற்றாம். அது,

"அருக்கன் நேர்நிற்பினும் அல்லிருளே காணார்க்கு
இருட்கண்ணே பாசத்தாக்கு ஈசன்"

எனவரும் முதனூலாசிரியரின் திருவாக்காலும் உணரப்படுவதாம்.

இவன் என்பது அதிகாரத்தால் அருட்குரவனைக் குறித்தது.

இதனால் வீட்டு நெறியில் நாட்டமுடைய ஆன்மாக்களுக்கு அருட்குரவனது இன்றியமையாமை கூறப்பட்டது.

நண்ணியிடும் - நண்ணும். பானுஒழிய நற்கல் அனல்படின் என்று கொண்டு கூட்டுக. பானு - சூரியன். நற்கல் - சூரிய காந்தக்கல்.

ஐந்தாமதிகாரம் முற்றியது.

## ஆறாம் அதிகாரம்

# அறியும் நெறி

அஃதாவது ஞானத்தைஉணரும் முறைமை கூறுகின்றது. மேலையது பக்குவம் வாய்ந்த ஆன்மாக்களை உணர்த்த அருட்குரவன் வருவான் என்றது. இது அவனால் ஞானம் உணரும் முறைமை கூறியது. அதனால் தொடர்பு உடையதாயிற்று.

1. நீடு மிருவினைகள் நேராக நேராதல்
கூடுமிறை சத்தி கொளல்

இது ஆன்மாக்களது இருவினை யொப்பின்கண் இறையருள் பதியும் என்கின்றது.

கண்ணழிவு:- நீடும் இருவினைகள் நேராக நேர் ஆதல் - நேராதற்கண் இறை சத்தி கொளல் கூடும் என்பது.

பொழிப்புரை:- ஆன்மாக்கள் பிறவி தொடங்கிய நாளிலிருந்து தொடர்ந்து வருகின்ற நல்வினையும் தீவினையும் சமமாக ஒத்துநின்ற நிலையின்கண் அவ்வான்மாக்களிடத்து இறையருள் பதிதல் கூடுவதாம் என்றவாறு.

அந்த அனுபவத்தைச் சத்திநிபாதம் என்று சாத்திரங்கள் கூறும். அது முற்றவமுடைய ஆன்மாக்களுக்கு இருவினையொப்பின்கண் முதல்வன் குருவாய் வந்து உணர்த்தியபின் நிகழும் ஒருவகை மெய்யுணரனுபவமாம். ஆகவே இங்கு அதுவே ஞானத்தை உணர்ந்த முறையுமாயிற்று என்பதாம்.

மேற்சரியை கிரியை யோகமாகிய நற்றவங்களைச் செய்து பழகிய ஆன்மாவானது அடுத்துவரும் ஒரு பிறவியில் நற்குடிக்கண் நல்ல தாய் தந்தையர்க்கு மகனாக வந்து பிறக்கும். அத்தவப் பயனால் அந்த ஆன்மாவுக்கு இன்பத்தில் உவப்பும் துன்பத்தில் உவர்ப்புமின்றி அவ்விரண்டையும் ஒப்ப மதிக்கும் சமனிலை உணர்வு வாய்க்கும். அதுவே இருவினையொப்பு எனப்படுவது. அந்தப் பக்குவநிலையறிந்த முதல்வன் அருட்குரவனாகி விரையவந்து அந்த ஆன்மாவை உணர்த்திவிடுவான். அவ்வாறு உணர்த்தப்படும் ஞானமே அந்த உயிர் அறிவில் நிலையாகப்

பதிந்துவிடும். அதுவே இங்கு ஞானம் என்றும் சத்திநிபாதம் என்றும் சொல்லப்பட்டதாம். இந்த அனுபவத்தை முதனூலாசிரியர் மெய்கண்டார்.

"பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கும்
இசைத்து வருவினை யிலின்பம் இசைத்த
இருவினை யொப்பில் இறப்பில் தவத்தால்
மருவுவனாம் ஞானத்தை வந்து"

என்று அருளிச் செய்தார்.

நேராக - சமமாக, நேராதல் - ஒத்தல், நேராதற்கண் என அங்கு ஏழனுருபு விரிக்க, இறைசத்தி - இறைவனது சத்தி. அந்தச் சத்தியே அருள் என்றும் ஞானம் என்றும் சொல்லப்படும்.

இருவினைகள் ஆன்மாக்கள் பிறவி தொடங்கிய நாளிலிருந்து கூடியும் குறைந்தும் தொடர்ந்து வந்ததால் "நீடும் இருவினைகள்" என்றார்.

2. ஏக னனேக னிருள்கரும மாயையிரண்
டாகவிவை யாறாதி யில்.

இது பொருள் ஆறு என்கின்றது.

கண்ணழிவு:- ஏகன் அனேகன் இருள் கருமம் மாயை இரண்டு ஆக இவை ஆறு ஆதி இல் என்பது.

பொழிப்புரை:- ஒருவனேயாகிய இறையும், பலவேயாகிய உயிர்களும் அவ்வுயிரை அநாதியே ஒட்டியுள்ள ஆணவமலமும் இடையில் வந்து ஒட்டிய கன்மமும் சுத்தமும் அசுத்தமும் ஆகிய மாயை இரண்டும் ஆக இவை ஆறும் ஆதியில்லாதவை என்றது அநாதியே உள்ள பொருள்களாம் என்றவாறு.

பொருள் ஆறு என்றது இந்நூலாசிரியர்க்குக் கருத்தாக இருந்தது. இருள்மலத்தையும் கருமத்தையும் ஆன்மாக்களின் குணமும் தொழிலுமாகக் கொண்டு பசுவில் அடக்கியும் மாயை இரண்டென்பதை ஒன்றே எனக்கொண்டும் பதி பசு பாசம் எனப் பொருள் மூன்று எனக் கொண்டவரே பெரும்பான்மையினர். "சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள் மூன்றுள" என்பது கச்சியப்ப சிவாசாரியார் கருத்து. முதனூலாசிரியர் மெய்கண்டாரும்

தாம்படைத்த சிவஞான போத நூலில் பொதுவியற்கண் வரும் ஆறு ஏழாஞ் சூத்திரங்களால் சத்து அசத்துக்களை வரையறுக்குமிடத்துப் பாசமாகிய உலகம் அசத்து எனவும். பதியாகிய இறை சத்து எனவும், பசுவாகிய உயிர் சத்தசத்தெனவும் பொருள் மூன்றே கொண்டு வரையறுத்தார். இது சார்பு நூலாதலின் இந்நூலாசிரியர் ஆகமங்களின் வழிநின்று பொருள் ஆறு என்று கூறினார். ஆகமங்கள் பொருள் மூன்று எனவும் நான்கு எனவும் ஐந்து எனவும் ஆறு எனவும் ஏழு எனவும் இப்படிப் பலவாறாய்க் கூறின. தமிழ்ச் சான்றோர் பலரும் உடன்பட்டது பொருள் மூன்று என்பதுதான்.

---

ஆதி இல் என்பது அநாதியே உள்ளவை என்றதாம்.

3. செய்வானுஞ் செய்வினையுஞ் சேர்பயனுஞ் சேர்ப்பவனு
முய்வா னுளனென் றுணர்

இது ஒரு சார் பொருள் நான்கு எனவும் கூறுகின்றது.

கண்ணழிவு:- செய்வானும், செய்வினையும், சேர்பயனும் ஆகிய இம்மூன்றோடு உயிர்கள் உய்வான் - - உய்யும் பொருட்டு சேர்ப்பவன் ஒருவனும் உளன் என்று நீ உணர் என்பது.

பொழிப்புரை:- வினை செய்யும் ஆன்மாவும், அது செய்யும் வினையும், அவ்வினையால் வரும் பயனும் ஆகிய மூன்றனோடு ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுச் செய்வினைப் பயனைச் செய்தவனோடு சேர்க்கின்ற முதல்வன் ஒருவனும் உளன் என்று நீ உணர்வாயாக என்றவாறு

சேர்பயனும் என்புழி ஆகிய மூன்றனோடு எனவொரு சொல் வருவித்துக் கொள்க. கொள்ளவே உளன் என்னும் பயனிலைக்குச் சேர்ப்பவனும் என்பது எழுவாயாக அமையும்.

இவ்வாறு ஒடுக்கொடுத்துப் பிரித்துப் பொருள் கொண்டதால் சமணம் போன்ற சில மதங்கள் முதல் மூன்றை மட்டுமே உடன்படவும், சைவ சமயம் ஒன்றே நான்காவதொன்றையும் உடன்பட்டது என்ற கருத்தும் பெறலாம்.

பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலைத் தொல்லைப்
பழவினையும் அன்னதகைத்தே தற்செய்த
கிழவனை நாடிக் கொளற்கு

எனவரும் நாலடியார்ப் பாடலொன்றினால் வினை தானே சென்று செய்தானை அடையும் என்பதே சமணர்க்குக் கோட்பாடாம் என்பது தெரிந்தது. ஆனால் இதனைச் சைவர் உடன்படார்.

வள்ளலவன் – செய்பவர் செய்திப் பயன் வினைக்கும் செய்யேபோல்
செய்வன் செயலணையா சென்று எனவும்,

அவ்வினையைச் செய்வதனில் அவ்வினைஞர்தாம் சென்றங்கு
அவ்வினையைக் காந்த பாசாசம்போல் அவ்வினையைப்
பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்
ஆர்தாம் அறிந்தணைப்பார் ஆங்கு

எனவும்,

முதனூலாசிரியர் மெய்கண்டார் வினைதானே சென்று செய்தானை அடையாது என்பதனை உடன்பாட்டாலும் எதிர்மறையாலும் உறுதிபடக் கூறினமையால்சைவநெறி ஒன்றினுக்கே இந்நான்கும் உடன்பாடாம் என அறியலாம்.

இவ்வாறே தெய்வச் சேக்கீழார் பெருமானும்,

"செய்வினையும் செய்வானும் அதன்பயனும் சேர்ப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி யல்லவற்றுக் கில்லையென
உய்வகையால் பொருள் சிவன் என்றருளாலே உணர்ந்தறிந்தார்

எனச் சாக்கிய நாயனார் புராணத்திலும் கூறியவாறு கண்டுகொள்க.

4. ஊனுயிரால் வாழு மொருமைத்தே ஊனொடுயிர்
தானுணர்வோ டொன்றாந் தரம்.

இது பக்குவமுடைய ஆன்மாக்களுக்கு ஞானத்தை முதல்வன் உள்நின்றும் உணர்த்துவான் என்கின்றது.

கண்ணழிவு:- ஊனொடு நின்ற உயிர்தான் உணர்வோடு ஒன்று ஆம் தரம் ஊன் உயிரால் வாழும் ஒருமைத்து என்பது.

பொழிப்புரை:- உடம்போடு கூடிநின்ற உயிர் தன்னில் வியாபகமாயுள்ள இறையருளால் ஞானம் உணர்த்தப்பட்டு அதனோடு ஒன்றி வாழும் தன்மையானது உடம்பு உயிரால் உணர்த்தப்பட்டு அதனோடு ஒன்றி வாழும் ஒரு தன்மையைப் போன்றது என்றவாறு.

வீட்டுநெறி கூறுகின்றாராதலின் உயிர் உடம்போடு கூடி நின்றாலும் அது உடம்பை மறந்து தன் உணர்வில் உணர்வாய் நின்று ஞானத்தை உணர்த்தி வருகின்ற இறையருளோடுதான் ஒன்றிவாழும் என்றார் ஆசிரியர்.

ஊன் உயிரால் வாழும் ஒருமைத்து என்றதால் உடம்புதான் உயிரைச் சார்ந்து வாழ்ந்ததே தவிர உயிர் உடம்பைச் சார்ந்து வாழவில்லை. அதன் வாழ்வு இங்கு இறையோடு மட்டுந்தான் என்றே ஆசிரியர் குறித்தார்.

பிறப்பு நெறியிற் போலாது வீட்டு நெறியில் உயிரானது இறையருளால் ஞானம் உணர்த்தப்பட்டு இறையருளோடு ஒன்றியே வாழ்ந்துவரும் என்பது இதனாற் கூறப்பட்டது.

பிறப்பு நெறியிலாயின் உயிர் உடம்பால் அல்லது உலகால் அல்லது மாயையால் உணர்த்தப்பட்டு உடம்பைச் சார்ந்தே வாழும் என்பதும் இதனால் உணரலாம்.

உணர்வு என்றது உணர்வில் உணர்வாயுள்ள திருவருளை என்றதாம்.

ஒன்றாம் தரம் என்றது ஒன்றிவாழும் தன்மை என்பதாம்.

உயிரால் உடம்பு வாழ்ந்தாலும் உடம்பு உயிரை அறியாது. அதுபோல இறையருளால் உயிர் வாழ்ந்தாலும் உயிர் இறையை அறியாது என்பது பெத்த காலத்து நிலை. அறியும் என்பது முத்திக் காலத்து நிலையாம் ஆதலின் இங்கு அறியும் நெறி என்பது முத்திக் காலத்தையே சுட்டியது என்க.

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா ஆங்கவை போலத்
தாம்தம் உணர்வின் தமியருள்
காந்தம் கண்டபசாசத் தவையே எனவரும்

சிவஞான போதத்து ஐந்தாஞ் சூத்திரத்தாலும் இதனை அறிந்து கொள்க.

அங்குப் பிறப்பியல் கூறி வீட்டியலும் உணர்த்தினார் அந்த ஆசிரியர். இங்கு வீட்டியல் கூறிப் பிறப்பியலும் உணர்த்தினார் இந்த ஆசிரியர். இவையெல்லாம் "சிவஞான போதமும் விளக்கவுரையும்" என்ற நூலில் விளங்க வுரைத்தனம். ஆண்டுக் காண்க.

5. தன்னிறமும் பன்னிறமும் தானாங்கற் றன்மைதரும்
பொன்னிறம்போல் மன்னிறமிப் பூ

இது உயிர் சார்ந்ததன் வண்ணம் பெறும் என்கின்றது.

கண்ணழிவு:- தன்நிறமும் பல்நிறமும் தான் ஆம் கல்லுக்கு அத்தன்மை தரும் பொன்நிறம்போல் இப்பூமியில் உள்ள ஆன்மாக்களுக்கு அவ்வாறான தன்மை மன் நிறம் தரும் என்பது

பொழிப்புரை:- படிகமானது தனது இயற்கை நிறத்தையும் தான் சார்ந்ததனால் பெற்ற செயற்கை நிறங்களையும் ஞாயிற்றின் ஒளியால் தானே காட்டி நின்றாற் போலப் பூமியில் உள்ள ஆன்மாக்களும் தமது இயற்கை வண்ணத்தையும் தாம் சார்ந்து நின்ற பொருள்களால் பெறும் செயற்கை வண்ணங்களையும் இறைவனருளால் மட்டுமே காட்டி நிற்பனவாம் என்பது.

படிகத்திற்குத் தன் நிறமாவது நிறமற்ற தன்மையேயாம். அதுதான் இருளில் இருளாயும், ஒளியில் ஒளியாயும் விளங்குமல்லவா? அந்த இரண்டு மற்ற நிறமே படிகத்திற்குத் தன் நிறமாம் என்பது.

படிகத்திற்குப் பன்னிறமாவது அதுதான் சார்ந்த பலநிறங்களால் படிகத்தின் மேல் கரிய நிறத்தைப் பூசி ஞாயிற்றின் ஒளியில் வைத்துப் பார்த்தால் அது கருநிறமாயே தோன்றும். செந்நிறத்தைப் பூசி ஞாயிற்றின் ஒளியில் வைத்துப் பார்த்தால் அது செந்நிறமாயே தோன்றும். அந்நிறங்கள் அதற்குச் சர்ந்த பொருள்களால் கிடைத்த நிறங்களாம்.

படிகத்தின் தன் நிறத்தையும் பன்னிறங்களையும் ஞாயிற்றின் ஒளி கொண்டே தீர உணர முடியும் என்ற கருத்தினால்தான் இங்குக் கல்லுக்கு அத்தன்மை தரும் பொன் நிறம் என்றார் அசிரியர்.

அதுபோல

உயிருக்கும் தன் வண்ணமும் உண்டு. அதுதான் சார்ந்த பொருள்களினாலாய பல வண்ணங்களும் உண்டு. ஆன்மா ஞானத்தை உணர்ந்த வழித் தான் சார்ந்திருந்த உடம்பின் வேறாயும் இனித் தான் சாரவிருந்த இறையின் வேறாயும் தன்னைத் தனியாகப் பிரித்துணர்தலே ஆன்மாவுக்குத் தன் வண்ணமாகும். அதைத்தான் ஆன்மப் பிரகாசம் என்றும் ஆன்ம தரிசனம் என்றும், தம்மை உணர்தல் என்றும் மெய்கண்டார் கூறினார். அந்தத் தூய உணர்வில் நின்றே ஆன்மாப் பதிப் பொருளைச் சிந்தையிலே தேடியுணர்ந்து அதனோடு ஒன்றுவதாகிய புதிய சார்பினைப் பற்றும். பல வண்ணமாவது அது மலத்திலும், மாயையிலும், திருவருளிலும் அழுந்தும்போது கிடைக்கும் வண்ணங்களாம். இவையெல்லாமும் இறையருளின் வெளிச்சத்தாலேதான் நாம் தீர உணர முடியும் என்பது இங்கு வந்த உவமையினால் பெறுதும். அது "பொன்னிறம்போல் மன்னிறம் இப் பூ" என்பதுதான்.

ஆன்மா மலத்தில் அழுந்தும் போது அது மலசொரூபம் பெறும். மாயையில் அழுந்தி நின்றபோது தத்துவ வன்னரூபம் பெறும். இறையருளில் அழுந்தி நிற்கும்போது பெறும் உருவமே அருளுருவம் ஆகும்.

இந்த உண்மைகளை யெல்லாம் முதனூலாகிய சிவஞான போதத்துள்

"பன்னிறமே காட்டும் படிகம் போலிந்திரியம்
தன்னிறமே காட்டும் தகை நினைந்து பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய் பொய்யா மெய்கண்டான்
மெய்ப்பொருட்டுத் தைவமாம் வேறு"

எனவரும் உரைப்பாட்டாலும் அதற்கு யாம் உரைத்த விளக்கவுரையானும் உணர்ந்து கொள்க வென்பது.

கல் - படிகம். பொன்நிறம் - ஞாயிற்றினது ஒளி, மன்நிறம் - இறையினது அருளொளி. பூ - பூமியில் உள்ள ஆன்மாக்கள்.

இங்கு அருட்பாவில் உவமையில் வைத்துத் தன்நிறம் என்றது ஆன்ம தரிசனத்தையும் பன்னிறம் என்றது பாச தரிசனத்தையும் பதி தரிசனத்தையும் உணர்த்தின வெனவும் அறிக.

6. கண்டொல்லை காணுநெறி கண்ணுயிர் நாப்பணொளி
உண்டிலலை யல்லா தொளி.

இது இறையருளா லன்றி இறையைக் காண்டலரிது என்கின்றது.

கண்ணழிவு:- கண் உலகத்துப் பொருளைக் கண்டு ஒல்லை காணும் நெறியினுக்கும், உயிர் பதிப் பொருளைக் கண்டு ஒல்லை காணும் நெறியினுக்கும் ஒளி உண்டு (தேவைப்படுவதாம்) ஆகவே ஒளி அல்லாது காணுமாறு இல்லை என்பது

பொழிப்புரை:- உடம்பில் வாய்த்துள்ள கண்ணானது உலகத்துப் பொருள்க;ளைக் கண்டு தெளியும் உலக நெறியினுக்கும் உயிரானது பதிப் பொருளைக் கண்டு தெளியும் வீட்டு நெறியினுக்கும் முறையே கதிரொளியும் இறையொளியும் தேவைப்படுவனவாம். ஆகவே இங்கு அவ்விறை யொளியாகிய அவ்வருளையல்லாது பதிப்பொருளைக் காணுமாறில்லை என்றவாறு.

"அவனருளாலே அவன்தாள் வணங்கி" என்வரும் வாதவூர்ப் பெரியார் அனுபவமும் இங்குக் கருதத் தக்கது.

கதிரொளியைக் கொண்டு உலகத்துப் பொருள்களைக் கண்டு தெளியுமாறு போல இறையருளைக் கொண்டு பதிப் பொருளைக் கண்டு தெளிய வேண்டும் என்பது இங்கு உணர்த்தப்பட்டது.

இறுதிக்கண் வந்த ஒளி அருளின்மேற்று. ஒளியல்லாது இல்லை எனக்கொண்டு கூட்டுக.
ஒல்லை காண்டலாவது தெளிதல் என்பதாம். விரைந்து தெளிதலுமாம்.

கண்டு ஒல்லை காணும் நெறியினைக் கண் உயிர் இரண்டினுக்கும் ஏற்றியுரைக்க. அங்கு வந்த ஒளி கதிரொளிக்கும் இறையொளிக்கும் பொதுவாய் நின்றது.

நாப்பண் - இடை, பொது.

7. புன்செயலி னோடு புலன்செயல்போ னின்செயலை
மன்செயல தாக மதி.

இது அறியும் நெறிக்கண் நின்ற ஆன்மாத் தன் பணியை இறைபணியாக மதித்தொழுக வேண்டும் என்கின்றது.

கண்ணழிவு:- புன் செயலின் கண் ஓடு புலன் செயலை உயிரின் செயலாக மதித்தல்போல நின்செயலை மன்செயலதாக மதி என்பது.

பொழிப்புரை:- மாணாக்கனே, பெத்த காலத்தில் அற்பமான உலகத்துப் பொருள்களை விரும்பி அவற்றின்மேற் செல்கின்ற பொறிகளின் செயலை நீ உயிரின் செயலாகவே மதிப்பதுபோல இந்த முத்திக் காலத்தில் நீ செய்யும் செயல்களையெல்லாம் நின்மலன் பணித்த செயல்களாகவே கருதி யொழுகுவாய் என்றவாறு.

இது ஏகனாகி இறைபணி நிற்குமாறு கூறப்பட்டது. அது முதனூலில் பத்தாஞ் சூத்திரத்தால் உணர்த்தப்பட்டது. அது "அவனே தானேயாகிய அந்நெறி - ஏகனாகி இறைபணி நிற்க - மலமாயை தன்னொடு வல்வினை யின்றே", எனவரும் சூத்திரமாம். அங்கு "ஏகனாகி இறைபணி நிற்க" என்றதனையே இங்கு "நின் செயலை மன்செயலதாக மதி" என்றார் இந்நூலாசிரியர். அவ்வாறு மதித்தல் அத்துவித நெறியில் உறைத்து நிற்கும் நிவஞானியர்க்கு மட்டுமே கூடுவதொன்றாம் என அறிக.

அத்துவித நெறியாவது இறைவனை உலகு உயிர்க்கு வேறாய் வைத்து உணராமல் ஒன்றாய் வைத்து உணர்வது. "வேறாய் உடன் ஆனான் இடம் வீழிம்பிழலையே" என்பது பிள்ளையார் அருள்வாக்கு. இறைவன் உயிர்களோடு ஒன்றாய் நின்ற உண்மையைச் சிவஞானி உணர்ந்து தானும் அவனோடு ஒன்றாய் நிற்கப் பழகுவான். அதனால் சிவஞானிக்கு நான் என்ற உணர்வும் வாராது. நான் செய்தேன் என்ற எண்ணமும் தோன்றாது. எல்லாம் அவனே என்றும், எல்லாம் அவனே செய்கின்றான் என்றும் எண்ணி ஒழுகி வருவான். இது தான் ஏகனாகி இறைபணி நிற்கும் ஒழுக்கமாகும். இந்த ஒழுக்கத்தைத்தான் இங்கு ஆசிரியர் "நின் செயலை மண் செயலதாக மதி" என்று அறிவுறுத்தினார்.

ஓடு புலன் என்றது வினைத்தொகை. புலன் என்பது இங்குப் பொறியை உணர்த்திற்று.

புலன் செயல்போல் என்றது பொறிகளின் செயலை ஆன்மாவின் செயலாக மதிப்பதுபோல என்றதாம்.

மன்செயலை நோக்க உலக காரியம் அற்பமேயாதலின் அது புன்செயல் எனப்பட்டது.

8. ஓராதே ஒன்றையுமுற் றுன்னாதே நீமுந்திப்
பாராதே பார்த்ததனைப் பார்.

இது இறையருளில் திளைக்குமாறு கூறுகின்றது.

கண்ணழிவு:- ஓராதே.............பார் என்பது

பொழிப்புரை:- மாணாக்கனே, இதுபொழுது அத்துவித நெறியில் நின்ற நீ உலகை இறைவனின் வேறாய்ப் பிரித்து எண்ணாதே. உலகப் பொருள் ஒன்றையும் ஆழ்ந்து சிந்திக்காதே. கண்முன்னால் நின்ற யாதோர் பொருளையும் கண்ணாலும் பாராதே. உன்னை நோக்கி ஓடிவருகின்ற அருள் வெள்ளத்தில் நீயும் தோய்ந்து இன்புற்றிரு என்றவாறு.

9. களியே மிகுபுலனு மாய்க்கருதி ஞான
ஒளியே ஒளியா ஒளி.

இது நிட்டை கூடி அருளில் உறங்குமாறு கூறுகின்றது.

கண்ணழிவு:- களியே மிகு புலனுமாய் கருதி ஞான ஒளியே ஒளியா ஒளி என்பது

பொழிப்புரை:- மாணாக்கனே, பேரின்பக் களிப்பு ஒன்றையே ஐம்புல இன்பமாய்க் கருதி அந்த இன்பத்தை இடையறாமல் வழங்கிக் கொண்டிருக்கின்ற ஞான வொளியையே ஒளிக்குமிடமாகக் கொண்டு நீ ஒளித்திரு என்றவாறு.

எனவே ஒளியை ஒளிக்குமிடமாகக் கொண்டு ஒளிக்கும் அனுபவமே இங்கு நிட்டை கூடி உறங்கும் அனுபவமாம் என்று தெளிக.

முன்பு சகல நிலையில் கேவலத்தில் இருந்தபொழுது மலவிருளில் ஒளிந்து உயிர்ப்புமின்றி உறங்கிய அனுபவம் பஞ்சாவத்தைகளில் ஒன்று. இங்கு ஞான வொளியில் அவ்வாறு ஒளிந்து உறங்கும் அனுபவம் சுத்தாவத்தைகளில் ஒன்று. அது தூக்க அனுபவம். இது தூங்காமல் தூங்கும் அனுபவம். அது பிறவிக்கு வழிகோலுவது. இது பிறவியை அறுப்பது.

10. கண்டபடி யேகண்டு காணாமை காணாமல்
கொண்டபடி யேகொண் டிரு.

இதுவுமது.

கண்ணழிவு:- கண்டபடியே....................இரு என்பது.

பொழிப்புரை:- மாணாக்கனே, திருவருள் இடையறாமல் உன்னைக் கண்டிருந்தவாறே நீயும் அதனையே கண்டிருந்து இதுபொழுது உன்னைத்திரும்பிப் பாராத பாசத்தை நீயும் திரும்பிப் பாராமல் திருவருள் உன்னை வலியவே வந்து ஆட்கொண்டவாறே நீயும் அதற்கு ஆட்பட்டிரு என்றவாறாம்.

திருவருளை நினைந்திருத்தலும் உலக பாசங்களை மறந்திருத்தலும் நிட்டை கூடியார்க்கு உரிய செயல்களா மாதலின் அவற்றை முறையே கண்டும் காணாதுமாய் இருக்கவென்றார்.

கொண்டபடியே கொண்டிருத்தலாவது, அவன் ஆண்டானும் இவன் அடிமையுமாய் முத்திக் காலத்திலும் நினைந்திருத்தல் என்பதாம். இறைவனோடு சீவன் முத்த நிலையில் ஒன்றாய்க் கலந்துவிட்ட பின்னர் இறைவனும் தானும் சமமாகி விட்டதாகச் சிவஞானி மறந்தும் எண்ணுதல் கூடாது என்பதற்காகவே ஆசிரியர் இங்கு இவ்வாறு வலியுறுத்தினார். அறியும் நெறிக்கண் சிவஞானி இவ்வாறெல்லாம் நினைந்து தனது அருள்நெறிக்கோர் அரண் தேடிக்கொள்ள வேண்டும் என்பதுதான் இங்கு ஆசிரியர்க்குக் கருத்தாயிருந்தது. இவ்வாறே முதனூலாசிரியர் சிவஞான போதத்து வீட்டியலில்

"மெய்கண்டான் மெய்ப் பொருட்குத் தைவமாம் வேறு"

எனவும்

"அப்பணைந்த உப்பின் உளம் அணைந்து சேடமாம் கப்பின்றாம்

எனவும்

"பொதுவதனில் அகண்டமும் தைவமே ஆனத்தால் அன்பின் தொழு"

எனவும்

"முன்னவன் தான் தானே தானாச்செய்தும் தைவம் என்றும்
தைவமே" - ஆனால் தொழுகை வலி

எனவும்

பலவிடத்தும் இந்த உணர்வு நெறியை வலியுறுத்துவார் எனவும் இங்கு அறிக.

சேடம் எனவும், தைவம் எனவும் அங்குவந்த சொற்கள் அடிமை என்னும் பொருளையே குறித்தவாறும் காண்க.

இப்பாக்கள் நான்கும் மாணாக்கனை நோக்கிக் கூறியவை.

நேயத்தில் அழுத்துமாறு ஒன்றினையே இங்கு நான்கு பாக்களாலும் பலபட விரித்துக் கூறினார் ஆசிரியர்.

**ஆறாமதிகாரம் முற்றியது.**

---

## ஏழாமதிகாரம்

# உயிர் விளக்கம்

அஃதாவது ஞானாசிரியன்பால் ஞானத்தைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து உணர்ந்த ஆன்மாக்கள் விளக்கமெய்தி இறையருளிற் றோய்ந்து இன்புறுதலைக் கூறுகின்றது. அவ்வாறு துய்க்கும் இன்பம் உயிரை வசீகரித்து நிற்பதாகலின் அஃதிங்கு உயிர் விளக்கம் எனப்பட்டது.

மேல் அறியும் நெறி கூறினார், அறிந்தபின் எய்தும் பயன் இங்குக் கூறுதலின் இது மேலதனோடு இயைபுடைத்தாயிற்று.

1. தூநிழலார் தற்காருஞ் சொல்லார் தொகுமிதுபோல்
தானதுவாய் நிற்குந் தரம்

இது ஞானத்தை உணர்ந்த ஆன்மாக்கள் இறைவனைச் சிந்தையில் தேடிக் கண்டு, அவனோடு ஒன்றி நிற்கும் முறைமை கூறுகின்றது.

'கண்ணழிவு:- தூநிழல் ஆர்தற்கு ஆரும் சொல்லார். தான் அதுவாய் நிற்கும் தரமும் அதுபோல் தொகும் என்பது

பொழிப்புரை:- வெயிலில் வருந்தி வந்தானுக்குக் குளிர்ந்த நிழலில் தங்கி இன்புறுதலை யாரும் சொல்லித் தரவேண்டா. நிழலைத் தேடிச் சென்று அவன் தானே தங்கி இன்புறுவான். பிறவித் துன்பத்தால் வருந்திக் குருவருளால் ஞானத்தை உணர்ந்தான் ஒருவனும் இனி இறைவனோடு தான் அதுவாய் ஒன்றி நின்று பெறக்கடவதாய வீடுபேறும் அவனுக்கு அதுபோல் தானே வந்து நிறைவதாம் என்றவாறு.

நிழலின் தூய்மை இங்குத் தண்மையைக் குறித்து நின்றது.

வெயிலில் விடாய்த்து வந்தவன் தண்ணிழலின்பத்தைத் தானே தேடிப் பெறுவது போலப் பிறவித் துன்பத்தால் வருந்திக் குருவருள் பெற்று நின்றான் ஒருவனும் இனி வீட்டின்பத்தைத் தானே தேடிப் பெறுவான் என்பதாம்.

"பாசம் அகலத் தண்ணிழலாம் பதி" யென்றார் முதனூலாரும். தரம் அதுபோல் தொகும் என முடிக்க.

2. தித்திக்கும் பால்தானுங் கைக்குந் திருந்திடும்நாப்
பித்தத்திற் றான்றவிர்ந்த பின்

இது பக்குவம் உடைய ஆன்மாக்களுக்கே வீடுபேற்றில் இன்பம் உண்டாம் என்கின்றது.

கண்ணழிவு:- நாவிற்குப் பித்தத்தில் பால்தானும் கைக்கும். அதுதான் தவிர்ந்தபின் தித்திக்கும் என்பது

பொழிப்புரை:- சுவையினை உள்ளவாறு அறியக்கூடிய நாவிற்கு அது பித்தத்தில் இருந்தபொழுது இனிய பால்தானும் கசப்பதாம். பித்தம் தெளிந்த பிறகு முன்னர்க் கசந்த பாலும் இனிப்பதாம் என்றவாறு.

இது பிறிது மொழிதலணியாகும். இதனால் அறியப்படும் பிறிது பொருள்:-

உயிர் பக்குவம் பெறாத நிலையில் அதற்கு வீடுபேற்றில் நாட்டம் உண்டாவதில்லை. அது பக்குவம் பெற்ற நிலையில் அதற்கு அதில் நாட்டம் உண்டாம் என்பது.

நாவிற்குத் திருத்தம் சுவையை உள்ளவாறறிதல்.

பித்தம் என்பது மூவகை நோய்களில் ஒன்று. அந்நோய்களாவன வாதம், பித்தம், சிலேத்துமம் என்பன. பித்தநோய் வந்தபொழுது எந்தவொரு சுவைப்பொருளும் நாவிற்குக் கசப்பதாம். அதனால் பித்தத்தில் கசக்கும்பால் தானும் அது தவிர்ந்தபின் தித்திக்கும் என்றார் ஆசிரியர்.

கன்னிகை யொருத்தி சிற்றின்பம் வேம்பென்னினும் கைக்கொள்வள் பக்குவத்தில் என வருவதும் அது.

3. காண்பா னொளியிருளிற் காட்டிடவுந் தான்கண்ட
வீண்பாவ மெந்நாள் விடும்.

இது குருவருளால் உயிர்விளக்கம் பெறும் ஆன்மாக்கள் அவ்வருளைத் தாம் குருவருளால் பெற்றதென்றே நினைப்பர் என்கின்றது.

கண்ணழிவு:- இருளிற் கிடந்தான் ஒருவனுக்கு ஒளி ஆங்குள்ள பொருளைக் காட்டிடவும் அதனைக் கண்டவன் தான் கண்டதாக நினைக்கும் வீண் பாவம் எந்நாள் விடும் என்பது.

பொழிப்புரை:- பெத்த நிலையில் மலவிருளில் மூழ்கி உலக வின்பத்தில் மயங்கிக் கிடந்தான் ஒருவனுக்கு அவனது உணர்வில் ஒளிந்துநின்ற இறையருளே உணர்த்த உணர்ந்தானாயினும் அதனைத் தானே உணர்ந்ததாக நினைக்கும் கொடிய பாவம் எந்த நாள் விட்டு நீங்குமோ - ஒரு நாளும் நீங்காது என்றவாறாம்.

முத்திக் காலத்தில் உயிர்விளக்கம் என்னும் அதிகாரத்தில் ஆசிரியர் இவ்வாறு கூறியவதனால் குருவருளால் மேன்மேலும் விளக்கம்பெறும் ஆன்மாக்கள் அவ்வருளைக் குருவருளால் பெற்றதென்றே நினைப்பரன்றித் தாமே பெற்றதாக ஒருநாளும் நினையார் என்பதுவே இதற்குக் கருத்தாகக் கொள்க!

ஒளி இங்கு அருளைக் குறித்தது. அது ஆன்மாக்களது உணர்வில் ஒளிந்து நின்றதால் அதனை ஒளியென்றார் எனலுமொன்று.

"தாம் தம் உணர்வின் தமியருள்" என்றார் முதனூலாரும்.

கண்ட வீண்பாவம் - கண்டதாக நினைக்கும் கொடிய பாவம். = செய்தலே யன்றி நினைத்தலும் பாவமாம் என்பது இதனாற் பெற்றாம்.

எந்நாள் விடும் என்புழி ஒருநாளும் விடாது என்பது சொல்லெச்சமாம்.

இதனைப் பிறிது மொழிதலணி என்பாரும் உளர்.

4. ஒளியு மிருளு மொருமைத்துப் பன்மை
தெளிவு தெளியார் செயல்.

இது பக்குவம் உடைய ஆன்மாக்களுக்கு இறையருள் மேன்மேல் வளர்கின்ற போது மலவிருள் தானே கெடும் என்கின்றது.

கண்ணழிவு:- ஒளியும் இருளும் இடத்தால் ஒருமைத்து பன்மை தெளிவு தெளியார் செயல் என்பது.

பொழிப்புரை:- ஒளியும் இருளும் இடத்தால் ஒன்றாகிய தன்மையுடையன. அவற்றுக்கு இடம் இரண்டெனத் தெளிதல் அறிவிலாதார் செயலாம் என்றவாறு.

"ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம். ஒன்று மேலிடின்
ஒன்று ஒளிக்கும் எனினும் இருள் அடராது" என

இவ்வாசிரியர் வேறு ஓரிடத்தும் கூறுவராகலின் இவ்வருட்பாவிற்கு இவ்வாறு உரைக்கப்பட்டது.

ஒளியும் இருளும் இடத்தால் ஒன்றாகிய தன்மை உடையன என்றது அவ்விரண்டும் ஓரிடத்திற்றானே இருந்தன என்றவாறாம். அவ்விரண்டில் ஒன்று மேலிடும்போது ஒன்று ஒளிக்குமாயினும் இருள் ஒரு ஞான்றும் ஒளியை விஞ்சாது எனவே இங்கு நாம் உணர்தல் வேண்டும்.

இது பிறிது மொழிதலணி.

இங்குப் புறத்தேயுள்ள நிலைமையைக் கூறி அகத்தேயுள்ள நிலைமையை ஆசிரியர் விளங்கவைத்தார். எவ்வாறெனிற் கூறுதும்.

ஒளியும் இருளும் ஓரிடத்திற்றானே இருந்தன. ஒளிக்கு ஓரிடம் இருளுக்கு ஓரிடம் என்பதில்லை. ஒளி மேலிடும் பொழுது அங்கிருந்த இருள் ஒளிக்கிறது. ஒளி அவ்வாறு மேலிட்டு இருளை விஞ்சுமே யன்றி இருள் மேலிட்டு ஒளியை விஞ்சுவது ஒரு நாளும் இல்லை. இது உலகத்தியற்கை.

புறத்தேயுள்ள இந்த நிலை அகத்திலும் உண்டு. ஒவ்வொரு உயிரிலும் மலமாகிய இருளும் இருந்தது. இறையாகிய ஒளியும் இருந்தது. ஆனால் பக்குவப்பட்ட உயிரிடத்துக் குருவருளால் இறையொளி மேலோங்கிய பொழுது அங்கு மலவிருள் தானாக ஒளிக்கிறது. இவ்வாறு இறையொளி உயர்ந்து மலவிருளைக் கெடுக்குமே யன்றி மலவிருள் உயர்ந்து இறையொளியைக் கெடுப்பதென்பது ஒரு ஞான்றும் இல்லை. இந்த உண்மையைத்தான் ஆசிரியர் இந்த அருட்பாவால் உணர்த்தினார் என அறிக.

அறியவே, பக்குவப்பட்ட உயிர்களிடத்துக் குருவருளால் இறையொளி மேலிட்டு உயிர் விளக்கமுறும்பொழுது அங்கு நெடுங்காலமாய் நீங்காதிருந்த மலவிருள் நீங்கிப்போம் என்பது இந்த அருட்பாவால் கூறப்பட்டது. அதனால் இது உயிர் விளக்கம் ஆயிற்று.

இவ்வருட்பாவிற்குப் பலரும் பலவாறு உரைத்தனர் என்றாலும் அவ்வுரைகள் அதிகாரத்திற்கு ஏற்புடையவாய் இல்லை என்றே உணரப்பட்டன. அல்லதூஉம் அவற்றால் சொற்குணமும் விளங்கவில்லை என்றும் தெரிந்தது.

ஒளியும் இருளும் ஒருமைத்து என்பது பன்மை ஒருமை மயக்கம் அல்லது ஒருமைத்து என்பதனை அவ்விரண்டனோடும் தனித்தனிக் கூட்டியுரைப்பினும் அமையும்.

5. கிடைக்கத் தகுமோநற் கேண்மையார்க் கல்லால்
எடுத்துச் சுமப்பானை இன்று.

இது குருவருளால் ஞானத்தை உணர்ந்து விளக்கம் பெற்ற உயிர்களுக் கன்றி இறைவனை உரித்தாகப் பெறுதல் சாத்தியமின்று என்கின்றது.

கண்ணழிவு:- நல்ல கேண்மையார்க்கு அல்லால் எடுத்துச் சுமப்பானை இன்று கிடைக்கத் தகுமோ என்பது.

பொழிப்புரை:- முன்னே பல பிறவிகளிலும் சரியை கிரியை யோகமாகிய நல்ல தவங்களைச் செய்து பழகி அடுத்து வந்த ஒரு பிறவியில் சிறந்த ஞானாசிரியனது உறவினையும் பெற்று ஞானத்தை உணர்ந்து உயிர் விளக்கமெய்திய ஞானியர்க்கு மட்டில் இறைவன் சொந்தமாகக் கிடைப்பானே தவிர முற்றவம் சிறிதும் இல்லாத வீணர்க்கு அவன் சொந்தமாகக் கிடைப்பானோ - கிடைக்கமாட்டான் என்றவாறு.

எடுத்துச் சுமப்பான் - இறைவன். உயிர்களின் சுமைகளை யெல்லாம் தானெடுத்துச் சுமக்கின்றவன் இறைவனாதலின் அவனை எடுத்துச் சுமப்பான் என்றார்.

"தவமும் தவமுடையார்க் காகும் அவமதனை
அஃதிலார் மேற்கொள் வது" என்பது
குறள் நெறியாகலான் முற்றவமுடைய கேண்மையினார்க்கே இன்று எடுத்துச் சுமப்பான் கிடைப்பான் என்றார் ஆசிரியர்.

சுமப்பானை என்புழி வந்த ஐ சாரியை. அது சீருந்தனையும் சிதையாமைப் பொருட்டு வந்தது.

எடுத்துச் சுமப்பான் என்றது குழவியின் பொருட்டுத் தாய் மருந்துண்பது போல உயிர்களி;ன பொருட்டுத் தான் பாரம் சுமப்பான் இறைவன் என்றதாம். அது இறைவனது இரக்கத்தின் மிகுதி குறித்து நின்றது.

இன்று என்றது இந்த ஒரு பிறவியில் என்றதாம். அந்தப் பிறவி அந்த உயிர்க்கு இறுதியாக வாய்த்த பிறவி எனவும் அறியலாம்.

இது முற்றவம் சிறிது மில்லாத வீணர்க்கு இந்தப் பிறவியில் வீட்டு நெறி கூடாது என்று உணர்த்தியவாறாம்.

6. வஞ்ச முடனொருவன் வைத்த நிதிகவரத்
துஞ்சினனோ போயினனோ சொல்.

இது வீட்டு நெறியினைக் குருவருளால் பெறவேண்டுமேயன்றி அதனை வலிதிற் பெற நினைத்தால் அது ஆகாது என்கின்றது.

கண்ணழிவு:- ஒருவன் தேடி வைத்த நிதியினை வேறு ஒருவன் வஞ்சமுடன் கவர - கவர்ந்து கொள்ளற்கு நிதிக்குரியவன் துஞ்சினனோ போயினனோ நீ சொல் என்பது.

பொழிப்புரை:- உலகில் ஒருவன் தேடிவைத்த செல்வத்தை அவன் அறியாதவாறு வேறு ஒருவன் கவர்ந்து கொள்ள நினைப்பானாயின் ஒன்று நிதிக்குரியவன் தூங்கினானாதல் வேண்டும். இன்றெனில் அவன் இறந்தொழிந்தானாதல் வேண்டும். இரண்டும் இல்லையென்றால் அந்த நிதியத்தை அந்த வஞ்சகன் வஞ்சனையால் கவர்தல் இயலாது என்பது தான்.

இதுவும் பிறிது மொழிதலணியாம்.

இதனால் உணர்த்தப்பட்ட பிறிது பொருள்:- இறைவன் பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கென்று வைத்த பேரின்ப நிதியை வீட்டு நெறியாலன்றி ஒருவன் நாட்டு நெறியால் பெற நினைப்பது இறைவனை வஞ்சித்துப் பெற நினைப்பதைப் போன்றதாம். அது முற்றக் கடைபோகாது என்பதாம்.

நீ சொல் என்றது முன்னின்றானை நோக்கிக் கூறியது. அஃதோர் சொல்நடை என்று உணர்க.

துஞ்சினனோ போயினனோ சொல் என்ற குறிப்பினால் இறைவன் நம்மைப் போலத் தூங்கவும் மாட்டான், இறக்கவும் மாட்டான் என்பதும் உணரலாம், அவன் நின்மலன் ஆதலானும், பிறப்பிறப்பில்லாப் பெரியோன் ஆதலானும் என்க.

இதனால் வீடு பேற்றினைத் தவநெறியாற் பெறுதல் சாத்தியமேயன்றி அவநெறியாற் பெறுதல் சாத்தியமின்றாம் என்பது உணர்த்தப்பட்டது. இது அறியும் நெறியாகலான், அத்தவநெறியானது சரியை, கிரியை, யோகம், ஞானமாகிய நால்வகை நெறிகளாம் எனவும் அறிக.

7. தனக்கு நிழலின்றா மொளிகவருந் தம்ப
மெனக்கவர நில்லா திருள்

இது ஒளியினைக் கவர வல்ல படிகத் தூண் போல ஆன்மா இறையருளை முற்றுமாய்க் கவர நிற்பின் மலவிருள் தானே அகலும் என்கின்றது.

கண்ணழிவு:- தனக்கு நிழல் இன்று ஆம் - ஆகிய ஒளி கவரும் தம்பம் என - போல ஒளியினை முற்றுமாய்க் கவர - கவர நிற்பின் இருள் நில்லாது என்பது

பொழிப்புரை:- தனக்கு நிழல் இல்லையாயும் ஒளியினை முற்றுமாய்க் கவர்கின்றதாயுமுள்ள படிகத்தூண் போலச் சிவஞானியானவன் இறையருளை முற்றுமாய்க் கவர நிற்பானாயின் அவனிடத்து மலவிருள் நில்லாதகன்று போம் என்றவாறு.

ஒளியினைக் கவராது மறைக்கின்ற ஒவ்வொரு பொருளுக்கும் அதன் எதிர்ப்புறத்தே நிழல் விழும். படிகம் ஒளியினை மறைக்காது. மாறாக ஒளியினைத் தன்னுட் கவர்ந்து அதன் எதிர்ப்புறத்தே ஓடவிடும் தன்மையுடையது. அதனால் படிகத் தூணுக்கு நிழல் என்பதில்லையாம் என்றவாறு. இது இப்பொழுது மின்சாரயுகத்தில் நாம் அன்றாடம் கையாளுகின்ற குழல் விளக்கினைப் போல என்பதாம்.

படிகத் தூணானது ஞாயிறு எத்திசையில் நின்றாலும் அதன் ஒளியைத் தன்னுட் கவர்ந்து எதிப்புறத்தே ஊடுருவ விட்டுத் தனக்கு நிழலின்றாக விருந்ததால் "தனக்கு நிழல் இன்றாம் தம்பம்" எனவும், "ஒளிகவரும் தம்பம்" எனவும் கூறினார் ஆசிரியர். ஒளியை முற்றுமாய்க் கவரவல்ல படிகத் தூணினைப் போல ஆன்மாவும் இறையருளை முற்றுமாய்க் கவரநிற்குமாயின் அந்த ஆன்மாவினிடத்து மலவிருள் நில்லா தகன்றுபோம் என்பதே இந்த அருட்பாவால் கூறப்பட்டது.

இதனால் சிவஞானிகட்கு இறையருளால் மலவிருள் கெடும் என்பது அறியப்பட்டதாகலின் இது அறியும் நெறியாகி உயிர்க்கு விளக்கமாயிற்று.

8. உற்கைதரும் பொற்கை யுடையவர்போல் உண்மைப்பின்
நிற்க அருளார் நிலை.

இது அருள்வழி நடத்தலே சிவஞானிக்குக் கடனாம் என்கின்றது.

கண்ணழிவு:- ஒளிதரும் உற்கையினை பொற்கையில் உடையவர்போல் உண்மைப்பின் நிற்க. அது அருளார் நிலை என்பது.

பொழிப்புரை:- ஒளி தருகின்ற தீக்கொள்ளியைக் கையில் கொண்டு இருள்வழியில் நடந்து செல்வாரைப் போலச் சிவஞானி உண்மையாகிய திருவருளை முன்னிட்டு அதன்பின்னால் நடந்து செல்வானாக, அது அருள்நெறி நின்றார் அனைவர்க்கும் கடனாம் என்றவாறு.

இருள்வழி நடப்பார்க்குக் கையில் ஏந்திய தீக்கொள்ளி வழிகாட்டல்போல் இறைவழி நடப்பார்க்கு அவர் சார்ந்துநின்ற அருளே வழி காட்டும் என்பதாயிற்று.

உற்கை - தீக்கொள்ளி. அரணிக்குச்சியை ஒன்றோடு ஒன்றைத் தேய்யத்தாலே தீப்பற்றிக் கொள்ளும். அதுவே இங்கு உற்கை எனப்பட்டது. பழங்காலத்தில் இரவில் வழி நடப்பவர் அரணிக்குச்சியாகிய தீக்கொள்ளியைக் கையில் கொண்டே நடந்து செல்வது வழக்கம். தீக்கடை கோல் எனவும் அது சொல்லப்படும்.

ஒளி தரும் உற்கை என மாறுக. பொற்கை - அழகிய கை இருள் வழியில் உற்கை ஏந்தியதால் அது பொற்கை ஆயிற்று.

உண்மை இங்கு அருளைக் குறித்தது. உண்மைப்பின் நிற்றல்ாவது அருள் பணித்த வழியில் நடத்தல் என்பதாம்.

அருள்வழி நடத்தல் உயிர்க்கு விளக்கம் செய்தலின் இது உயிர் விளக்கமாயிற்று.

9. ஐம்புலனாற் றாம்கண்ட தென்றா லதுவொழிய
ஐம்புலனார் தாமா ரதற்கு

இது முத்திக் காலத்தில் சிவஞானியர் இறையையன்றி உலகையும் அருளாலே அறிவர் என்கின்றது.

கண்ணழிவு:- இறைவனை அருளால் அறிந்துநின்ற சிவஞானியர் முத்திக் காலத்தில் உலகினையும் அவ்வருளாலேதான் அறிவர். அவ்வாறு எண்ணுதலை யொழித்துச் சிவஞானியர் உலகினை ஐம்புலனால் தாம் கண்டது என்றால் - என்று ஒருவன் சாதிப் பானானால் அது ஒழிய அதற்கு ஐம்புலன் ஆர் தாம் ஆர் என்பது

பொழிப்புரை:- இறைவனை அவன் அருளால் அறிந்து நின்ற சிவஞானியர் முத்திக்காலத்தில் உலகினையும் அவ்வருளாலேதான் அறிவர். அவ்வாறு எண்ணுதலை யொழித்துச் சிவஞானியர் உலகினைத் தம் ஐம்புலன்களால் தாம் அறிந்தது என்று ஒருவன் சாதிப்பானானால் இறையருளைத் தவிர்த்து அவ்வாறு அறிவதற்கு ஐம்புலன்கள்தாம் எம்மாத்திரம்? அவர்தாம் எம்மாத்திரம் என்றவாறு.

பெத்த காலத் தான் மாக்களும் உலகினைத் தம் புலன்களால் அறிந்தன வென்றல் சித்தாந்தமாகாது என்பதும் இதனாற் கூறப்பட்டது.

தாம் தம் உணர்வின் தமியருள் - (அருளால்)
காந்தம் கண்ட பசாசத் தவையே

என முதனூலாசிரியரும் திட்பஞ்செறியக் கூறினமையால் இறையருள் ஆன்மாக்களறிவில் நின்று உணர்த்த அவை உணர்ந்தன வென்றலே சித்தாந்தமாம் என்று உணர்க. பெத்த காலத்தான்மாக்கள் இறைவன் உணர்த்தியதை அறியமாட்டா. முத்திக் காலத் தான்மாக்கள் அறிவன, அவ்வளவே.

இனி முத்திக் காலத்தில் சிவஞானியர்க்கு அவர்தம் உடம்பு பொறிகரணங்களுங் கூடத் தம்வயமின்றி இறைவயப்பட்டே நிற்குமாதலால் அவர் ஒருபோது உலகினை அறிவதென்றாலும் இறையருளால் அறிந்ததாகக் கருதுவரேயன்றித் தம்புலன்களால் அறிந்ததாகக் கருதார் என்றதாம். அன்றியும்

"நாமல்ல இந்திரியம் நம்வழியினல்ல வழி
நாமல்லம் நாமும் அரன் உடைமையாம்"

என்றே சிவஞானியர் கருதுவர் என்பது முதனூலாகிய சிவஞான போதத்துப் பத்தாஞ் சூத்திரத் திரண்டாமதிகரணத்து முதலாவதாக வந்த உரைப்பாட்டாலும் அறியப்படுமாதலின் சிவஞானியர் தம் முத்திக் காலத்தில்

உலகினையும் இறையருளால் அறிவரே யன்றிப் புலனறிவால் அறியார் என்பதே உண்மையாம் எனவுணர்க.

ஆகவே சிவஞானியர் சிவனையேயன்றி உலகையும் சிவனருளாலே அறிவர் என்பதுவே அவர்க்கு அறியும் நெறியாகி அதுவே அவர் உயிர்க்கு விளக்கம் செய்யும் என்பதும் இங்கிவ்வருட்பாவால் உணர்த்தப்பட்ட பொருளாம் என்று உணர்க.

"ஐம்புலனார், தாமார் அதற்கு "என்புழி ஆர் என்பது இருவழியும் "எம்மட்டு" என்னுமோர் இழிவு குறித்தே நின்றது. இவ்வாறே வாதவூர்ப் பெரியாரும் "நானார் என்னுள்ளமார் ஞானங்களார் என்னை யாரறிவார்" என்று அருளிச் செய்தமை காண்க.

இந்த அருட்பாவிற்குப் பலரும் பல்வாறு உரைத்தனராயினும் அவை இங்கு அதிகாரத்திற்கு இயைபுடையனவாகத் தோன்றவில்லை என்பது.

10. தாமே தருமவரைத் தம்வலியி னரற்கருத
லாமே யிவனா ரதற்கு

இது இறைவன் தானே வலிய வந்து ஆன்மாக்களை ஆட்கொள்வானே யன்றி ஆன்மாக்கள் தாமே வலியச் சென்று ஆளாதல் இல்லை என்கின்றது.

கண்ணழிவு:- தாமே தரும் அவரை தம் வலியினால் அடையக் கருதல் ஆமே, அதற்கு இவன் ஆர் என்பது.

பொழிப்புரை:- தாமே வலிய வந்து வீடுபேற்றினைத் தரவல்ல இறைவரை ஆன்மாக்கள் மதியாமல் தாமே வலியச் சென்று அவரைப் பெறுதற்கு நினைத்தல் நெறியாகுமா? அவ்வாறு நினைத்தற்கு இவன்தான் எம்மாத்திரம் என்றபடியாம்.

அநாதியில் ஆன்மாக்கள் ஆணவமலத்தில் அழுந்தி உடம்புமின்றி உலகுமின்றி உணர்வுமின்றி உயிர்ப்புமின்றிச் சடம்போலக் கிடந்த நாள் தொட்டு இந்த நாள் வரை இறைவன் தானே வலிய வந்தன்றோ ஆன்மாக்களை ஆட்கொண்டு வந்திருக்கின்றான்? இருள் மலத்திற்கிடந்த உயிர்களுக்கு ஒளிமலமாகிய மாயையைப் புணர்த்தியது யார்? இறைவனேயன்றோ! மாயையின் புணர்ப்பால் உயிர்கள் உடம்புகூடி உலகில்

பிறத்தற்கு உபகாரமாய் நின்றவன் யார்? இறைவனே யன்றோ! ஓரறிவிலிருந்து ஆறறிவுவரை உயிர்களுக்குப் படிப்படியாக வருக்கப் பிறவிகளைக் கொடுத்து மானுடப் பிறப்பிற்கு உயர்த்தியவன் யார்? இறைவனேயன்றோ? உயிர்களின் வினையால் அவற்றின் பிறவிகளைக் கடல்போலப் பெருக்கினவன் யார்? இறைவனே யன்றோ. மனவறிவு பெற்றுச் சிறந்த மானுட வுயிர்களுக்கு உலகைக் காட்டி முப்பத்தொரு வகையான தத்துவ அறிவுகளையும் ஊட்டி வளர்த்தவன் யார்? இறைவனேயன்றோ. அத்தனை அறிவுகளையும் பெற்று உடம்பில் இலாடத்தானத்தே நின்று ஐம்பொறிகளையும் ஏவல்கொண்டு அரசோச்சப் பண்ணியது யார்? இறைவனே யன்றோ. அந்த நிலையிலும் ஆணவமலத்தின் தாக்கத்தால் அவத்தை என்ற பெயரால் பெற்ற அறிவுகளையெல்லாம் படிப்படியாக இழந்து வந்து உடம்பில் இருண்ட இடமாகிய மூலாதாரத்திலே சடம்போலக் கிடந்து உறங்கவும் மாயையின் தூண்டலால் இழந்த அறிவுகளை மீளவும் படிப்படியாகப் பெற்று ஒளியிடமாகிய நெற்றித்தானத்திலே நின்று விழிப்புடனிருக்கவும் செய்தது யார்? அவனேயன்றோ இப்படி ஒவ்வொரு நாளும் விழிப்பிலும் உறக்கத்திலும் உண்பதும் உறங்குவதுமாக நெடுங்காலம் உயிர்களை மருட்சி நிலையில் ஆழ்த்தியது யார்? இறைவனே யன்றோ? அந்த மருட்சி நிலைக்குமோர் பரிகாரமாகக் கலை முதலான அறிவு தத்துதவங்கள் வாயிலாக ஒளிந்து நின்றே அவ்வுயிர்களுக்கு இறையறிவைப் புகட்டியது யார்? இறைவனே யன்றோ. தெய்வம் என்பதோர் சித்தம் உண்டானதும் அவ்வான்மாக்கள் நல்வினைகளைச் செய்யவும் சரியை கிரியை யோகமாகிய நற்றவங்களிற் பழகவும் அவற்றுக்குத் துணையா யிருந்தது யார்? இறைவனே யன்றோ? அந்த நற்றவப் பயனால் அந்த ஆன்மாக்கள் ஒரு பிறவியில் நல்ல குடியில் வந்து பிறக்க விட்டது யார்? இறைவனே யன்றோ? அங்கு அவற்றுக்கு இருவினையொப்பு என்னும் சமனிலை உணர்வும் வாய்க்கப் பண்ணினது யார்? இறைவனே யன்றோ? ஆன்மாக்களின் அந்தப் பக்குவ நிலையினை உணர்ந்து தானே குருவாயும் வந்து ஞானத்தினை உணர்த்திவிட்டது யார்? இறைவனே யன்றோ! ஞானம் உணர்ந்ததும் பற்பல சாதகங்களையும் செய்து தன்பால் நெருங்கி வந்து நிற்கவும் பண்ணினது யார்? இறைவனே யன்றோ? இத்தனையும் அவன் தானே வலியவந்து உயிர்களை ஆட்கொண்ட திறத்தினை யன்றோ விளக்கி நிற்கின்றன? இப்படியாக வலியவே வந்து " தாமே தருமவரைத் தன் வலியினால் அடையக் கருதல் ஆமே, இவன் ஆர் அதற்கு " என்று இரக்கத்தோடு மனங்குழைந்து கூறினார் இங்கு ஆசிரியர் எனவுணர்க.

"நாடகத்தால் உன்னடியார்போல் நடித்துநான் நடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்"

எனவரும் வாஊர்ப் பெரியாரின் அனுபவப்படி வீடுபேற்றின்கண் சிவஞானியர்க்கு எழுகின்ற மிகப்பெரு வேட்கையைத்தான் இந்த அருட்பா சித்திரித்துக் காட்டியது என்க.

ஏழாமதிகாரம் முற்றியது.

## எட்டாம் அதிகாரம்

# இன்புறு நிலை

அஃதாவது குருவருளால் விளக்கம் எய்திய முத்தான்மாக்கள் அவ்வருளிற் குளித்து இன்புறும் நிலையினைக் கூறுவது. அதிகாரத் தொடர்பும் அதனாலே விளங்குவதாம்.

1. இன்புறுவார் துன்பா ரிருளி னெழுஞ்சுடரின்
பின்புகுவார் முன்புகுவார் பின்.

இது பேரின்பத்தின் சிறப்புக் கூறுகின்றது.

கண்ணழிவு:- முன்னால் துன்பு ஆர் இருளின் பின் புகுவாரே (பிறகு) எழும் சுடரின் பின் புகுவாராகி இன்புறுவார் என்பது

பொழிப்புரை:- முன்னால் துன்பம் நிறைந்த இருளில் நடந்து வருந்தியவரே பிறகு எழுந்துவரும் ஞாயிற்றினது ஒளியில் நடந்து இன்பமடைவர் என்றவாறு.

இது பிறிது மொழிதலணி. இதனால் உணர்த்தப்பட்ட பிறிது பொருள்:- முதலில் பிறப்பு நெறியில் நின்று உலகைச் சார்ந்து பலவழியாலும் துன்புற்ற வரே பிறகு வீட்டு நெறியில் நின்று இறையருளைச் சார்ந்து பேரின்பத்தின் எல்லை காண்பர் என்பதாம்.

முன்னால் உலகநெறியில் நடந்து துன்பமுற்று வருந்திய ஆன்மாக்களுக்கே பின்னால் இறைநெறியில் நடந்து பெறுகின்ற இன்பத்தின் பெருமை விளங்கும் என்பதற்காகவே இங்கு இரண்டும் கூறினார் ஆசிரியர். அதனால் இருதிறன் அறிவுடைய ஆன்மா முதலில் உலகைச் சார்ந்து வாழ்வதற்கும் உரியது, பிறகு இறையைச் சார்ந்து வாழ்வதற்கும் உரியது என்பதைக் குறிப்பித்தவாறாம் என்க. இந்தக் கருத்திலேதான் முற்றவமுடைய ஆன்மாக்களைக் குருவாய் வந்து உணர்த்திய முதல்வன் ஐம்புல வேடரிடத்தே வளர்ந்து செம்புல வேதியனை மறந்து விட்டாயே என்ற கருத்தினால்"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து எனத்தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தும்" என்று முதனூலாசிரியரும் அருளிச் செய்தார் என்று உணர்க. அங்கு "ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து "

என்பதற்கு அரசன் மகனாகிய நீ அரச குலத்தை மறந்து நீ வளரக் கூடாத ஐம்புல வேடர் குலத்தில் வளர்ந்தாயே என்று இறைவன் உணர்த்தியதாகப் பொருள் காண்பர் பிறரெல்லாம். இது சரியன்று. ஆன்மா இருதிறன் அறிவு உடையதாகலின் அது ஐம்புல வேடரிடத்திலும் வளரலாம். செம்புல வேதிய னிடத்திலும் வளரலாம் வேடரிடத்தில் வளர்ந்து வேதியனை மறந்தாயே என்று பொருள் காண்பதுதான் அங்குச் சரியாக இருக்கம் என்று உணர்க.

உலக நெறியிற் கிடைத்த இன்பத்தினும் வீட்டு நெறியிற் கிடைக்கும் இன்பம் சிறந்தது என்பது இதனாற் கூறப்பட்டது.

இன்பத்தின் சிறப்புக் கூறியதால் இது இன்புறுநிலையாயிற்று.

2. இருவர் மடந்தையருக் கென்பயன் இன்புண்டாம்
ஒருவன் ஒருத்தி உறின்.

இதுவும் பேரின்பத்தின் சிறப்பே கூறுகின்றது.

கண்ணழிவு:- மடந்தையர் இருவர்க்கு அவர்தம் புணர்ச்சிக் காலத்தில் பயன் என். ஒருவனோடு ஒருத்தி புணர்ந்தாலே அவட்கு அங்கு இன்பு உண்டாம் என்பது

பொழிப்புரை:- பெண்கள் இருவர்க்கு அவர்தம் புணர்ச்சிக் காலத்தில் இன்பம் என்பது இல்லையாம். ஒருவனோடு ஒருத்தி புணர்ந்தாலே அங்கு அவட்கு இன்பம் உண்டாம் என்றவாறு

இதுவும் பிறிது மொழிதலணியாம். இதனால் உணர்த்தப்பட்ட பிறிது பொருள்:-

ஆன்மாவாகிய பெண் உலகாகிய பெண்ணோடு - (மாயையோடு) புணர்கின்ற புணர்ச்சிக் காலத்தில் அங்கு அவட்கு இன்பம் என்பது இல்லையாம். ஆன்மாவாகிய ஒருத்தி இறைவனாகிய ஒருவனோடு புணர்கின்ற புணர்ச்சிக் காலத்தில் மட்டுமே அங்கு அவட்கு இன்பம் உண்டாம் என்பதாம்.

எனவே ஆன்மா உலகைச் சார்ந்து வாழும் பெத்த காலத்தின்பம் இன்பமாகா தென்பதும், அது இறைவனைச் சார்ந்து வாழும் முத்திக்

காலத்தின்பமே இன்பமாம் என்பதும் இதனாற் கூறப்பட்டது. படவே இதுவும் பேரின்பத்தின் சிறப்பே கூறியது என்று உணர்க. அதாவது ஆன்மாவுக்கு உலக இன்பத்தினும் இறையின்பமே மேலான இன்பமாம் என்று கூறப்பட்டது.

இதுவும் இன்பத்தின் சிறப்பே கூறியதால் இது இன்புறுநிலை ஆயிற்று.

ஆன்மாவைத் தலைவியாகவும் இறைவனைத் தலைவனாகவும் வைத்துப் பேசுவது சாத்திர நெறியில் ஒரு மரபு. தோத்திரநெறி யெனப்படும் திருமுறைகளிலும் அவ்வாறு உண்டு. அந்த மரபினை யொட்டியே ஆசிரியர் இங்கு இவ்வாறு கூறினார்.

மாயையைப் பெண்ணாகக் கூறுதலும் சாத்திர நெறியில் உண்டு. இறைவனுடைய சத்திகள் பலவற்றுள் ஒன்றாகிய மாயையும் ஒரு சத்தியே என்பது சித்தாந்தம். அந்த மாயையே ஒளிமலமாக உயிர்களை வந்தடுத்தபோது அவற்றுக்கு உடம்பாயும் உலகாயும் வந்தடுத்தது என்பதும் சித்தாந்தமே. அந்த வகையில் ஆன்மாவாகிய பெண்,. மாயையாகிய பெண்ணுடன் புணர்ந்த புணர்ப்பே ஆன்மாவுக்கு உலகநெறி எனப்பட்டது. அதாவது ஆன்மாவுக்குப் பெத்தகாலம் என்று சொல்லப்பட்டது. ஆன்மாவாகிய பெண் இறைவனாகிய ஆணுடன் புணர்ந்த புணர்ப்பு வீட்டுநெறியெனப்பட்டது. அதாவது ஆன்மாவுக்கு அது முத்திக்காலம் என்று சொல்லப்பட்டது. பெத்தகாலத் தின்பம் ஆன்மாவுக்கு ஒரு இன்பமாகாதெனவும், முத்திக் காலத்து வீட்டின்பமே சிறந்த இன்பமாம் எனவும் இங்கு ஆசிரியர் கூறினார்.

ஒருவனோடுஒருத்தியுறின் அவட்கு இன்பம் உண்டாம் எனக்கூட்டி உரைக்க

ஒரு பெண் வேறு ஒரு பெண்ணோடு கூடினால் அவட்கு இன்பம் இல்லை. அவளே வேறு ஒரு ஆணுடன் கூடினால் அவட்கு இன்பம் உண்டாம் என்பதைத்தான் அவ்வாறு கூறினார் என வுணர்க.

3. இன்பதனை எய்துவார்க் கீயு மவர்க்குருவம்
இன்பகன மாதலினால் இல்.

இது தன்னை வந்தடைவார்க்கு இன்பந் தருவானே யன்றித் தான் இன்புறான் இறைவன் என்கின்றது.

கண்ணழிவு:- அவர்க்கு உருவம் இன்பு அகனம் ஆதலினால் இன்பு அதனை எய்துவார்க்கு ஈயும் அதுவன்றித் தனக்கு இல் என்பது

பொழிப்புரை:- இறைவர்க்கு உருவம் இன்பமாகிய அருவமே யாதலால் அதனை அடைவார்க்குக் கொடுப்பன் அதுவன்றித் தான் இன்புறான் என்றவாறு.

மேல் ஒருவனோடு ஒருத்தி உறின் இன்பு உண்டாம் என்றார். அந்த இன்பம் ஒருத்திக்குத்தானேயன்றி ஒருவற்கு இல்லையென்பது இதனாற் கூறப்பட்டது.

"தந்தது உன்றன்னைக் கொண்டது என்றன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்த மொன்றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாது நீ பெற்றதொன்று என்பால்"

என வாதவூர்ப் பெரியாரும் இக் கருத்தே தோன்ற அருளிச் செய்தமை காண்க.

இறைவனோடு உயிர்கள் அத்துவிதமாய்ப் புணர்ந்து நின்ற நிலையில் உயிர்கள் இன்பமுறுமேயன்றி இறைவன் இன்புறான், ஏனென்றால் அவன் இன்பமே உருவானவன் ஆதலால் என்பதுவே இந்த அருட்பாவால் உணர்த்தப்பட்ட தென்க.

அவற்கு எனற்பாலது அவர்க்கு என நின்றது. அவன் பெருமை நோக்கி.

இன்பு அகளம் எனற்பாலது இன்பு அகனம் என நின்றது. அது ஏடுபெயர்த்து எழுதியோராலும் நிகழ்ந்திருக்கலாம். அகனம் - அருவம்

இன்பு அதனை என்புழி அது பகுதிப்பொருள் விகுதி.

ஈயும் என்பது செய்யுமென் முற்று. அது ஆண்பாற் கண் சென்றது.

4. தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்
கூடலைநீ யேகமெனக் கொள்.

இது ஆன்மா இறைவனோடு இரண்டறக் கலத்தலே அத்துவிதம் என்கின்றது.

கண்ணழிவு:- ஆன்மாவும் இறையும் கூடும்போது அவை தாடலைபோல் கூடி தான் வேறு நிகழா இன்பக் கூடலையே நீ ஏகம் எனக்கொள்.

பொழிப்புரை:- மாணாக்கனே, ஆன்மா நிட்டை கூடும்போது ஆன்மாவும் இறையும் தாடலைபோல் ஒன்றாகக் கூடிய நிலையில் ஆன்மா வேறு இறை வேறு எனக் கருதா வகை ஒன்றாய்க் கலந்த இன்பக் கலப்பினையே நீ அத்துவிதம் என்று அறிவாயாக என்றவாறு.

துவிதம் - இரண்டு. அ துவிதம் என்பது இரண்டல்லாத ஒன்று எனப்பொருள்படும். இரண்டாகவே இருந்த இரண்டு பொருள்கள் ஒன்றாய்க் கலந்து ஒன்றெனக் கருத நிற்பதுவே அத்துவிதம் ஆகும். அதற்குக் காட்டப்படும் உவமை தாடலை என்பது. தாளும் தலையும் ஆகிய இரண்டு சொற்கள் புணருங் காலைத் தாடலை என ஒரு சொல் போலப் புணர்ந்து நிற்கும். அந்தச் சொற்புணர்ப்பைப் போல ஆன்மா இறைவனோடு ஒன்றெனப் புணர்ந்த நிலையே அத்துவிதம் என்றார் ஆசிரியர்.

கூடல் - கலப்பு. அது இன்பக் கூடல் என்றதால் நிட்டை அனுபவமாயிற்று.

தாடலை என்பதில் தாள் இறைவனது தாளையும், தலை ஆன்மாவின் தலையையுமே குறித்து நின்றதால் ஆன்மா இறைவனோடு கலந்த நிலையிலும், அது அவனுக்கு அடிமைதான் என்பதை அச்சொற்கள் காட்டி நின்றன.

அவை தாம் எனற்பாலது அவைதான் என நின்றது. அல்லது தான்வேறு நிகழா இன்பக் கூடல் எனத் தான் என்பதை ஆன்மாவுக்கு ஏற்றியுரைப்பினும் அங்கு அமைவதாம்.

ஏகம் எனக்கொள் என்றதால், இது மாணாக்கற்கு அறிவுறுத்திய தாகலாம். கொள் - ஆய் விகுதி குன்றிவந்த முதனிலைத் தொழிற்பெயர், கொள்ளாய் என்பது பொருள்.

5. ஒன்றாலு மொன்றா திரண்டாலு மோசையெழா
தென்றாலொன் றன்றிரண்டு மில்.

இது அத்துவிதம் என்பதற்கு விளக்கம் கூறுகின்றது.

கண்ணழிவு:- ஒன்றாலும் ஒன்றாது இரண்டாலும் ஓசை எழாது என்றால், ஒன்று அன்று இரண்டும் இல், இரண்டு ஒன்றானது என்பது.

பொழிப்புரை:- இறையும் உயிரும் பொருளால் ஒன்றே என்றால் அங்குக் கலத்தல் நிகழவேண்டா. இரண்டாம் என்றால், ஒன்றாய்க் கலவாது, கலந்த பின்னும் வேறாயே நிற்பனவாம். அதனால் அவையிரண்டும் பொருளால் வேறாயிருந்து ஒன்றன் கட்டு நீங்கிய காலத்தில் இரண்டு ஒன்றானது என்பதே உண்மையாம். அதுவே அத்துவிதம் என்பதற்குச் சரியான விளக்கமாகும் என்பது

இங்கு ஓசை எழாது என்பத்றகுக் கலவாது என்பதே பொருள். அது குறிப்பால் பெறப்பட்ட பொருள் ஆம்.

கைகள் இரண்டு ஒன்றாய்க் கலந்தால் ஓசை எழும். கலவாதாயின் ஓசையெழாது. ஆகவே ஓசையெழாது என்றதால் கலவாது என்பதே பொருளாயிற்று.

ஒன்று அன்று இரண்டும் இல் என்பதற்குச் சரியான பொர்ருள் – ஏகம் எனலும் கூடாது, துவிதம் எனலும் கூடாது. அத்துவிதம் என்றலே ஏற்புடைத்தாம் என்பதே.

ஒன்றாலும் – ஒன்று என்றாலும். இரண்டாலும் – இரண்டு என்றாலும்

இந்த அதத்துவித நெறியினை முதனூலாசிரியர் மெய்கண்டதேவ நாயனார் தமது படைப்பு நூலாகிய சிவஞான போதத்துள் இரண்டு இடங்களில் எடுத்து மொழிந்து விளக்கினார். பெத்தநிலை ஒன்று. முத்திநிலை மற்றொன்று.

பெத்த நிலையில் ஆன்மாக்கள் கட்டு நிலையில் இறைவனோடு அத்துவிதமாயே நின்று அவனது ஆணையால் வினைகளைப் புசிக்கும். புசிக்கின்ற வழியாலே புதிய வினைகளை யீட்டும், ஈட்டிய வினை காரணமாக உலகில் இறந்தும் பிறந்தும் வரும் என்றார். இது இரண்டாஞ் சூத்திரம்.

முத்திநிலையில் ஆன்மாக்கள் கட்டு நீங்கிய நிலையில் இறைவனோடு அத்துவிதமாயே நின்று ஏகனாகி இறைபணி ஒழுகும் என்றார். இது பத்தாஞ் சூத்திரம்.

பெத்த நிலையில் ஆன்மாக்கள் இறைவனது அத்துவித நெறியில் மூழ்கியிருச்தன வாயினும் அந்த நெறியினை அவை உணர்ந்தனவில்லை. அவனது ஆணையால் வினைகளைப் புசிப்பதும் இறப்பதும் பிறப்பதுமாகவே இருந்தன.

முத்தி நிலையில் ஆன்மாக்கள் இறைவனது அத்துவித நெறியினைத் தீரவுணர்ந்த காரணத்தால் அவனோடு ஏகனாகி இறைபணி ஒழுகின. ஆன்மாக்களின் நிலை எதுவாயினுமாக, இறைவன் உலகு உயிர்களோடு எந்த நிலையினும் நீக்கமின்றிக் கலந்திருந்தான் என்பதுவே அத்துவித நெறியாம் என்றுணர்க.

6. உற்றாரும் பெற்றாரும் ஓவா துரையொழியப்
பெற்றாரும் அற்றார் பவம்.

இது இறைபணி நிற்பார்க்குப் பிறப்பில்லை என்கின்றது.

கண்ணழிவு:- உற்றாரும் பெற்றாரும் ஓவாது உரை ஒழியப் பெற்றாராயின் அவரும் பவம் அற்றார் ஆவர் என்பது.

பொழிப்புரை:- குருவருளால் ஞானம் பெற்று இறைவனை நெருங்கினாரும் அவனைத் தீரத் தெளிந்து நின்றாரும் நிட்டை கூடவேண்டாமே எந்த நேரமும் வாய்ச் சொல்லின்றி மோன நிலை பெற்றோராயின் அவரும் பிறப்பற்றவரேயாவர் என்றவாறு.

அங்கு அவர்தம் பேச்சொழிந்த நிலையே அவர்க்கு அங்கு நிட்டை என்றவாறாம்.

சிந்தை யடக்கிச் செயலொழிந்து இறைவனோடு ஒன்றுதலாகிய நிட்டையின் பயனும் மோனநிலை பெற்றார்க்கு வந்தெய்துமாகலின் பிறவியறுத்தற்கு அதுவே சாலும். அன்னார்க்கு நிட்டைகூடும் சாதகம் வேண்டாவென்பது இதனாற் கூறப்பட்டது.

7. பேயொன்றுந் தன்மை பிறக்கு மளவும்
நீயொன்றுஞ் செய்யாது நில்.

இது இறைபணி நிற்கும் ஞானிகள் பித்தராயும் உலாவுவர் என்கின்றது.

கண்ணழிவு:- பேய் ஒன்றும் தன்மை பிறக்கும் அளவும் நீ ஒன்றும் செய்யாது நில் என்பது

பொழிப்புரை:- ஏகனாகி இறைபணி நின்ற எல்லைக்கண் பேயினால் பற்றப்பட்டுப் பித்தராய் உலாவுந் தன்மை உன்பால் வந்து கூடும் வரையும் நீ உலகவினை ஒன்றையும் செய்யாதிரு என்றவாறு.

உன்மத்த நிலையும் சிவஞானியர்க்கு வந்து எய்தும் என்பது இதனாற் கூறப்பட்டது.

அந்த உன்மத்த நிலையினை,

"உத்தமன் அத்தன் உடையானடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு மாலிவவென்ன மனம் நினைவால்
ஒத்தன ஒத்தன சொல்லிட வூரூர் திரிந்தெவரும்
தத்தம் மனத்தன பேசஎஞ் ஞான்றுகொல் சாவதுவே"

எனவரும் வாதவூர்ப் பெரியாரின் திருவாக்கானும் உணர்ந்து கொள்க.

8. ஒண்பொருட்க ணுற்றார்க் குறுபயனே யல்லாது
கண்படுப்போர் கைப்பொருள்போற் காண்.

இதுவுமது

கண்ணழிவு:- ஒள்பொருட்கண் உற்றார்க்கு உறுபயன் கண்படுப்போர் கைப்பொருள்போல் அல்லாதுகாண் என்பது

பொழிப்புரை:- மாணாக்கனே, ஒள்ளிய பொருளாகிய திருவருளைச் சார்ந்து நிட்டை கூடினார்க்கு அவ்வருளால் பெறும் பயனானது உறங்குவாராது கையில் உள்ள பொருள் அவர் கையை விட்டு நழுவுவதுபோல நழுவாது என்பதை நீ அறிவாயாக என்றவாறு.

கையில் பொருளை வைத்துக் கொண்டு உறங்குபவர் உறக்கத்தில் பொருளை நழுவ விட்டு வருந்துவதைப் போலத் திருவருளைச் சார்ந்து நிட்டை கூடி உறங்குபவர் அத்திருவருட் பயனை ஒருபோதும் நழுவவிட்டு வருந்தமாட்டார். மாறாக அத்திருவருளாலாகிய பேரின்பப் பயனை அவர் அந்த உறக்கத்திலும் அனுபவித்துக் கொண்டுதானிருப்பர் என்பது இந்த அருட்பாவால் உணர்த்தப்பட்டதாம்.

உலகத்துப் பொருள்களைப்போல வெள்ளம் முதலியவற்றால் கேடுறா தாகலின் திருவருளை ஒண்பொருள் என்றார்

உறுபயன் கைப்பொருள்போல் அல்லாது காண் என முடித்து உரைகாண்க.

கைப்பொருள் உறக்கத்தில் நழுவும் அருட்பொருள் உறக்கத்திலும் நழுவாது, மாறாக அருளாலாம் பேரின்பப் பயனை ஊட்டிக் கொண்டிருக்கும் என்றது வேற்றுமையணி தோன்ற நின்றது.

எனவே சிவஞானியர் நிட்டையில் தூங்கும் தூக்கம் தூங்காமல் தூங்கும் தூக்கமே என்பதாயிற்று. "தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவதெக்காலம்" என்பது தாயுமானவர் அனுபவம்.

உலகத்தார் உறங்கும்போது அவர் தம்கைப் பொருளை இழப்பர். அது ஆணவமலம் தந்த அவத்தையால் வந்த உறக்கம். ஆனால் சிவஞானியர் நிட்டையில் உறங்கும்போதும் அவர்தம் ஒண்பொருளை இழவார். இது இறையருள் தந்த அவத்தையால் வந்த உறக்கம். எனவே அந்த உறக்கம் வேறு. இந்த உறக்கம் வேறு என்றவாறாயிற்று.

இதற்கு உரையெழுதினார் பலரும் வறிதே உரைத்து நிட்டை அனுபவம் வாளாபோயினர்.

காண் என்பது மாணாக்கனை நோக்கிக் கூறியது. அந்த நிட்டை அனுபவத்தை நீ தானும் நன்கு அறிந்துகொள் என்றவாறாம்.

9. மூன்றாய தன்மையவர் தம்மில் மிகமுயங்கித்
தோன்றாத இன்பமதென் சொல்.

இதுவுமது. இதுவும் நிட்டையில் இன்புறு நிலையே கூறுகின்றது.

கண்ணழிவு:- அவர் (சிவஞானியர்) தம்மில் மிகமுயங்கி - முயங்கிய நிலையில் மூன்று ஆய தன்மை தோன்றாத இன்பம். அது - அதனை என்சொல என்பது

பொழிப்புரை:- சிவஞானியர் சிவமும் தாமுமாகத் தம்மில் ஒன்றுகூடிய

இன்ப நிட்டையில் அறிவானும், அறிவும் அறிபொருளும் ஆகிய அம்மூன்றுமான தன்மை தோன்றாத அந்தப் பேரின்பத்தை என்னவென்று சொல்வது - சொல்ல முடியாது என்றவாறாம்.

சொல்ல முடியாது என்பது இங்குச் சொல்லெச்சம்.

சிவஞானி நிட்டை கூடிய நிலையில் அறிவானும் அறிவேயாக, அறிபொருளும் அவ்வறிவில் அதுவதுவாய்க் கலந்து நிற்க அதனை அறிகின்ற அறிவுதானும் அறிவுக்கு வேறான ஒன்றை அறியாது தன்னையே தானறிந்து நிற்க இதுதான் சிவஞானி நிட்டையில் சிவத்தை அறிந்த அனுபவம் என்பர். இங்கு அறிவான் இல்லை. அறிவானுக்கு உபகாரப்பட்ட அறிவும் இல்லை. அவ்வறிவால் அறியப்பட்ட வேறு பொருள் தானும் இல்லை. அறிவுதானே தன்னை அறிந்தது என்பதுதான் இங்கு நாம் கண்டது. அதனாற்றான் " அறியும் அறிவே சிவமும் ஆம்" என்றார் முதனூலாசிரியர் மெய்கண்ட தேவ நாயனார். இந்த வோருயர்ந்த அனுபவத்தைத்தான் "மூன்றாய தன்மை தோன்றாத இன்பம்" என்றார் இந்த நூலாசிரியர். அதனைச் சொற்களால் உணர்த்தலோ உணர்தலோ அரிது என்னும் கருத்தால் "அதனை என்சொல" என்றும் தவித்தார் ஆசிரியர்.

சொல எனற்பாலது இங்கு ஈற்றகரம் தொக்குச் சொல் என நின்றது. அது தொகுக்கும் வழித் தொகுத்தல். அது தொகாது சொல வென்றே நிற்பின் அங்குக் கலித்தளை தட்டு வெண்பாச் சிதையும் எனவும் அறிக.

10. இன்பி லினிதென்ற லின்றுண்டே லின்றுண்டா
மன்பு நிலையே அது

இதுவும் சிவஞானி நிட்டையில் இன்புறு நிலையே கூறுகின்றது.

கண்ணழிவு:- இன்பில் இனிது என்றல் - என்று கருதுதல் இன்று உண்டேல் இன்று உண்டாம் உண்டாகின்ற அன்பு நிலையே அது ஆம் என்பது

பொழிப்புரை:- சிவஞானி நிட்டையில் சிவனுந் தானுமாய்க் கலந்து அனுபவிக்கும் நிரதிசயமான இன்பத்தில் அதுதான் இனிதாக இருந்தது என்று கருதும் இன்ப அனுபவம் இந்த முத்திக் காலத்தில் அவனுக்குத் தோன்றுமானால் அது அவனுக்க அச்சிவத்தின்மேல் எழுந்த அன்பால் விளைந்த அனுபவம் ஆமேயன்றிப் பிறிதில்லை என்றவாறாம்.

எனவே சாத்திரநெறி நின்றார் நிட்டையில் ஆய்வின் அடிப்படையில் களிப்புக் கவற்சிகளின்றி அடையும் இன்பம் நிரதிசய இன்பமே என்றும், அது இன்னவாறிருந்தது என்று சொலற்கரிதாய இன்பமே என்றும் தெரிந்தது. ஆனால் தோத்திரநெறி நிற்போர் அன்பின் அடிப்டையில் களிப்புக் கவற்சிகளுக்கிடையே அடையும் இன்பமே இன்னவாறிருந்தது என்று சொல்லற்குரித்தாய இறையின்பமாம் என்றும் தெரிந்தது. தெரியவே சாத்திரநெறி வேறு, தோத்திரநெறிவேறு என்றும் நாம் இங்கு உணரக் கிடந்ததாம் என்க.

அதனாலன்றே முதனூலாசிரிய ராகிய மெய்கண்டதேவ நாயனார் அன்பு நெறிப்பட்ட திருமுறைகளை அருளிச் செய்த திருஞான சம்பந்தர் முதலான அருளாளர்கள் வாழ்ந்த தென்னாட்டு மரபினுக்கு ஏற்பத் தாம் படைத்த சிவஞான போத நூலின்கண் பதினொன்றாஞ் சூத்திரங்காறும் ஆகமநெறிப்பட்ட சாத்திர நெறியினையே அதன் மரபு குன்றாமல் போதித்து முடித்தவர் பன்னிரண்டாஞ் சூத்திரத்தால் அன்புநெறிப்பட்ட திருமுறை மரபில் வந்த தோத்திர நெறியினையும் சாத்திர நெறியோடு இணைப்பான் புகுந்து இதுகாறும் சிவனை அசிந்திதனாகக் கண்ட சிவஞானி இனித் தன்தேகம் விழுங்காறும் அவனைச் சிந்திதனாகவும் கண்டு வழிபடுவானாக என்ற கருத்தால் மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே என்று விதித்தார். இதுகாறும் சிவனைச் சிந்தையில் கண்டு தெளிந்த சிவஞானி இனித் தன்தேகம் விழுங்காறும் அவனைச் சிவனடியார் திருவேடத்திலும் சிவாலயத்திலும் சிந்தைக்கெட்டும் திருவுருவங்களில் வைத்தும் வழிபட்டும் வருக வென்றோர் விதிமுறையினையும் வகுத்தார். அதனால் சாத்திர நெறியும் தோத்திர நெறியும் வேறு வேறான நெறிகள் என்பதே மெய்கண்டார்க்குக் கருத்தெனக் தெரிந்தது. தெரியவே சாத்திரநெறி ஆய்வின் அடிப்படையில் எழுந்தது என்பதும், தோத்திர நெறி அன்பின் அடிப்படையில் எழுந்தது என்பதும், முன்னதற்குக் கலைக் கருவூலங்கள் ஆகமங்களே என்பதும், பின்னதற்குக் கலைக் கருவூலங்கள் திருமுறைகளே என்பதும் உணரலாம். ஆகவேதான் "இன்பில் இனிது என்றல் இன்று உண்டேல் இன்று உண்டாம் அன்பு நிலையே அது" என்று இவ்வாசிரியர் தம் முதனூலாசிரியர் வழி நின்று கூறினார்.

அன்பு நிலையே அது என்பதற்கு அன்பு நெறியாகிய வழிபாட்டு நெறியால் உண்டான அனுபவமே அது என்று பொருள் உரைத்துக் கொள்க. அது தோத்திர நெறியால் உண்டான அனுபவமே என்றதாம். அதனாலன்றே "அத்துவிதி அன்பின் தொழு" என்றும் "ஆனத்தால் அன்பின் தொழு" என்றும் அங்கு ஆசிரியர் மெய்கண்டார் அருளிச் செய்தார் என்றும் உணர்க.

**எட்டாமதிகாரம் முற்றியது.**

## ஒன்பதாமதிகாரம்

# அஞ்செழுத்தருள் நிலை

அஃதாவது திருவைந்தெழுத்தினது உண்மை நிலையினைக் கூறுவது. "நமச்சிவாய வா அழ்க நாதன் தாள் வாழ்க" எனவரும் திருவாசக முதலடியுள் முதற்சீராக வந்த அதனை ஒற்றுநீக்கி உச்சரித்துக் கொள்க. அது முற்றவம் உடையார்க்கு இறைவன் குருவாகி ஞானம் உணர்த்த வரும்பொழுது அவர்க்கு அது உடன் உபதேசிக்கப்படுவது ந-ம-சி-வா-ய எனவருவது சிவனது திருப்பெயராக விளங்குவது. வேதங்களில் வரும் மந்திரங்கள் அனைத்தினும் தலையாயது என்பர்.

1. அருள்நூலும் ஆரணமும் அல்லாதும் ஐந்தின்
பொருள்நூல் தெரியப் புகின்

இது திருமுறைகளும் வேதாகமங்களும் திருவைந்தெழுத்தின் பொருளை விளக்கும் நூல்களே என்கின்றது.

கண்ணழிவு:- தெரிய புகின் அருள் நூலும் ஆரணமும் அல்லாதும் - அல்லாத நூல்களும் ஐந்து எழுத்தின் பொருள் நூல் - நூல்களாம் என்பது.

பொழிப்புரை:- ஆராயப் புகுந்தால் திருஞான சம்பந்தர் முதலான அருளாளர்கள் அருளிச் செய்த திருமுறைகளும் இறைவன் செய்ததாகக் கூறப்படும் வேதங்களும் அவை வாயிலாக வந்த ஆகமம் முதலான நூல்களும் திருவைந்தெழுத்தின் பொருளை விளக்கும் நூல்களாம் என்றவாறு.

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார்தமை நன்னெறிக்கு உய்ப்பது"

இது பிள்ளையார் அருளிய திருமுறை. ஐந்தெழுத்தின் சிறப்பினை விளக்கியது.

"கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சிவாயவே"

இது நாவரசர் அருளிய திருமுறை. இதுவும் ஐந்தெழுத்தின் சிறப்பே கூறியது. பிறவும் அன்ன.

எல்லா நூல்களும் திருவைந்தெழுத்தின் பொருள் நூல்களே என்றதால் அது அவ்வெல்லாவற்றினும் சிறந்தது என்பது கருத்தாம்.

அது, "வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது
நாத னாமம் நமச்சிவாயவே"

எனவரும் பிள்ளையார் திருவாக்கானும் உணரப்படும்.

2. இறைசத்தி பாசம் எழில்மாயை ஆவி
உறநிற்கும் ஓங்காரத் துள்.

இது அந்த மந்திரத்தில் எழுத்துக்கள் நின்ற முறைமை கூறுகின்றது.

கண்ணழிவு:- ஓங்காரத்துள் - ஓங்காரத்துள்ளாகிய திருவைந்தெழுத்தில் பாசம் எழில்மாயை இறை, சத்தி, ஆவி உற நிற்கும் என்பது.

பொழிப்புரை:- ஓம் என்ற பிரணவத்துக்குள்ளாக விளங்கும் திருவைந்தெழுத்தில் உயிருக்கு மூலக்கட்டாகிய மலத்தினைக் குறிக்கும் 'ந' என்ற எழுத்தும், பிறகு வந்து தொத்திய கட்டுக்களாகிய மாயை கன்மங்களைக் குறிக்கும் 'ம' என்ற எழுத்தும், சிவத்தைக் குறிக்கும் 'சி' என்ற எழுத்தும் சிவனருளைக் குறிக்கும் 'வா' என்ற எழுத்தும், உயிரைக் குறிக்கும் 'ய' என்ற எழுத்தும் முறையே நிற்பனவாம் என்றவாறு

எனவே அவ்வாறு நின்ற திருவைந்தெழுத்தின் வடிவம் ந-ம-சி-வா-ய என்பதே.

திருமுறைகளிலும் வேதங்களிலும் ஆகமங்களிலும் பிறவற்றிலும் திருவைந்தெழுத்தின் வடிவம் ந ம சி வா ய என்றே இருப்பதைக் கொண்டு இந்த அருட்பாவிற்கு உணர இவ்வாறு கொண்டு கூட்டி உரைக்கப்பட்டது.

நம சிவாய என்பதற்குப் பொருள் வணக்கம் சிவனுக்கு என்பதே யாயினும் அதனை இவ்வாறெல்லாம் கருதி யுணர்ந்தனர் அறிஞர் என்பது இங்கு அறியப்பட்டது.

ஓங்காரத்துள் என்றாராயினும் ஓங்காரத்துள்ளே நின்ற திருவைந்தெழுத்தில் என்றே உரைக்க, அம்மாமந்திரம் ஒன்றே ஓங்காரத்தையும் ஒள்ளடக்கி நின்றதாகலான்.

ஆகவே பிறமந்திரங்களை ஓங்கரத்தை உடன் கூட்டியே உச்சரித்தல் வேண்டும் என்றவிதி இருந்தாலும் இந்த மாமந்திரத்தை ஓங்கரமின்றியும் உச்சரிக்கலாம் என்பது கருத்தாயிற்று. அதனாலன்றே "நமச்சிவாய வாஅழ்க நாதன் தாள் வாழ்க" என்றே போற்றியருளினார் பெரியார் திருாதவூரரும் என்க.

பாசம் என்பது பொதுவில் மாயையைக் குறிப்பதேயாயினும் ஆணவம் உயிர்க்கு மூலக்கட்டாய் இருத்தலின் இங்குப் பாசம் என்பது மலத்தைக் குறித்ததாயிற்று. மாயையும் கன்மமும் உயிரைப் பிறகு வந்து தொற்றிய கட்டுக்களாம் என்றும் உணர்க. அதனாலன்றே மூலமாகிய மலத்தினைச் சகசமலம் என்றும் பிறகுவந்து தொத்திய மலங்களை ஆகந்துக மலங்கள் என்றும் சாத்திரங்கள் சொல்லின வென்பது. அது சகசமலம் ஆகந்துக மலங்கள் எனவரும் வழக்குக்களால் உணர்கவென்பது.

3. ஊன நடன மொருபா லொருபாலாம்
ஞானநடந் தான் நடுவே நாடு.

இது திருவைந்தெழுத்தின் ஒருசார் உச்சரிப்பு முறை இதுவென்கின்றது.

கண்ணழிவு:- ஊன நடனம் ஒருபால் ஞானநடம் ஒரு பாலாம் தான் நடுவே என்றிவ்வாறு நாடு என்பது

பொழிப்புரை:- மாணாக்கனே, பிறப்பினைக் குறிக்கும் பாசவெழுத்துக்களாகிய நம என்பன ஒரு பக்கத்தே யாகவும், வீட்டினைக் குறிக்கும் பதியெழுத்துக்களாகிய சிவா என்பன மற்றொரு பக்கத்தே யாகவும், அவ்விரண்டனையும் சார்ந்தும் சாரவும் நிற்பதாயுள்ள உயிரைக் குறிப்பதான ய என்னும் பசுவெழுத்து அவ்விரண்டற்கும் நடுவேயாகவும் அமைந்த திருவைந்தெழுத்தின் வடிவத்தையும் நீ எண்ணிப் பார்ப்பாயாக என்றவாறு.

அது சிவா ய நம என்பது.

இதன்கண் நம என்னும் இரண்டெழுத்துக்களும் பாசவெழுத்துக்கள். அவை உயிருக்குப் பிறப்பினை நல்குவன. அதனால் அவை ஊன நடனம் எனப்பட்டன; சிவா என்னும் இரண்டெழுத்துக்ளும் பதியெழுத்துக்கள், அவை உயிருக்கு வீட்டினை நல்குவன. அதனால் அவை ஞான நடம் எனப்பட்டன.இடைநின்ற ய என்னும் எழுத்தே பசுவெழுத்தாம்.அது ஒரு

காலத்தில் பாசத்தை அணைந்து பிறப்பில் உழல்வதாயும் வேறு ஒரு காலத்தில் பதியை அணைந்து வீடுபெறுவதாயும் உள்ளதால் நடுவே நின்றதாம்.

மேல் அறிமுகப்படுத்தப்பட்ட திருவைந்தெழுத்தினை இவ்வாறு உச்சரிப்பாரும் உளர் ஒரு சாரார் என்று இங்கு அறிவித்தபடியாம்.

4. விரியமந மேவியவ்வை மீளவிடா சித்தம்
பெரியவினை தீரிற் பெறும்

இது சிவத்தை முதல்வைத்தோதுதலின் சிறப்புக் கூறுகின்றது.

கண்ணழிவு:- விரி ய நம மேவி யவ்வை மீளவிடா, தம் பெரிய வினை தீரின் சி பெறும் என்பது.

பொழிப்புரை:- சிவாய நம என்பது விரியுங்கால் சிவா யநம எனவும், சிவாய நம எனவும் விரியலாம். சிவா என்பதை மெலிந்தும் யநம என்பதை வலிந்தும் உச்சரிக்க நேர்ந்தால் ய என்னும் உயிரை நம என்னும் பாசங்கள் பற்றி நின்று அதனைப் பிரிந்து போகவிடாமல் தடுப்பனவாம். உயிர் வினையிலிருந்து நீங்குமானால் அது பாசத்தை விட்டுப் பதியைச் சார்ந்தும் வாழலாம். ஆகவே சிவா யநம வென்று உச்சரிப்பதை விட்டு சிவாய நம வென்று உச்சரித்து வருதல் தக்கதாம் என்றவாறு.

யமந என்பதை யநம எனக்கொண்டு கூட்டுக.

உயிரைக் குறிக்கும் ய என்ற எழுத்தானது பாச வெழுத்துக்களைச் சார்ந்து ஒலிக்காமல் பதியெழுத்துக்ளைச் சார்ந்து ஒலிக்குமாறு உச்சரிக்க வேண்டும் என்று ஆசிரியர் இங்கு விதித்தார். அதாவது சிவா யநம என்று தொனிக்குமாறு உச்சரிக்காமல் சிவாய நம என்று தொனிக்குமாறு உச்சரிக்க வேண்டும் என்பதாம். அவ்வாறு உச்சரிப்பதால் உயிர் பாசத்தைச் சார்ந்து பிறப்பில் அழுந்தாமல் பதியைச் சார்ந்து வீட்டு நெறியைத் தலைப்படும் என்று உணர்க.

பெரிய வினையாவது நெடுங்காலமாக உயிரைத் தொடர்ந்து வருகிற வினை என்பதாம்.

வினை தீரின் ஆன்மா சி பெறும் என முடிக்க. தொடர்ந்து வரும் வினைகளும் வினையொப்பின்கண் சமனிலை பெறுமானால் அப்பொழுது

ஆன்மாத்தானே சிவத்தை அணைந்து நிற்கும் எனப்பொருள் காண்க. அப்பொழுதும் முதல்வன் குருவாய் வந்து உணர்த்தவே அது நிகழும் என்பதுதான் கருத்தாகும்.

5. மாலார் திரோத மலமுதலாய் மாறுமோ
மேலாசி மீளா விடின்.

இதுவுமது.

கண்ணழிவு:- மால் ஆர் திரோதம் மலம் முதல் ஆய் - ஆகி நிற்க, சி மேலா மீளாவிடின் மாறுமோ-பிறவி மாறுமோ மாறாது என்பது.

பொழிப்புரை:- மயக்கத்தைத் தருகின்ற மாயையும் அறியாமையைத் தருகின்ற மலமும் ஆகிய பாசவெழுத்துக்கள் (நம) மந்திரத்தின் முதலாய் நிற்க ஓதின் பிறவி நீங்குமோ - சிவத்தை முன்னாக வைத்து ஓதாவிடின் அது நீங்குமோ நீங்காது என்றவாறாம்.

நம சிவாய என்று ஓதின் பிறவி நீங்காது எனவும் சிவாய நம என்று ஓதினால் மட்டுமே அது நீங்குவதாம் எனவும் இங்குக் கூறப்பட்டது.

இது இந்த ஆசிரியர்க்குக் கருத்தாக விருக்கலாம். ஆனால் திருமுறைகளை அருளிச் செய்த அருளாளர்கள் அனைவரும் நமசிவாய வென்று உச்சரித்தலையே வலியுறுத்திச் சென்றார்கள் என அறியலாம்.

6. ஆராதி ஆதாரம் அந்தோ அதுமீண்டு
பாராது மேலோதும் பற்று.

இதுவுமது.

கண்ணழிவு:- மேல்ஓதும் அது - அதனையே பற்று. அவ்வாறு பற்றினால் மீண்டு பாராது. அதுவே அனைத்திற்கும் ஆதாரம் ஆம். அதனால் நீ அதனையே ஆராதி என்பது

பொழிப்புரை:- மாணாக்கனே, சிவத்தை முன்னாக வைத்து ஓதுகின்ற மேலே சொன்ன அந்த முறையினையே நீ ஏற்பாயாக. அவ்வாறு ஏற்பையாயின் உயிரானது பாசத்தைத் திரும்பவும் பற்றாது. அந்தச் சிவமே அனைத்திற்கும் ஆதாரமாய் நிற்பதொன்றாகலான் நீ அதனையே உச்சரித்து வருவாய் என்றவாறு.

ஓதும் அது எனக்கூட்டி அதனை என விரிக்க.

மீண்டு பாராது - விட்ட பாசத்தை உயிர் மீண்டும் பற்றாது.

இங்கும் சிவா யநம என்று தொனிக்கும் வகை ஓதாமல் சிவாய நம என்று தொனிக்கும் வகை ஓது என்றதாம்.

7. சிவமுதலே யாமாறு சேருமேல் தீரும்
பவமிதுநீ யோதும் படி.

இதுவுமது.

கண்ணழிவு:- சிவம் முதலே ஆமாறு அதனுடன் யவ்வும் சேருமேல் பவம் தீரும் இதுவே நீ ஓதும் படியாம் என்பது.

பொழிப்புரை:- மாணாக்கனே, சிவத்தைக் குறிக்கும் எழுத்துக்கள் இரண்டும் முதலில் நிற்குமாறு வைத்து அவற்றுடன் யவ்வும் சேர்ந்தொலிக்க ஓதிவரின் பிறப்பு நீங்குவதாம். ஆகலான் நீ ஓதும் முறை அதுவேயாம் என்றவாறு.

அது சிவாய நம என்பது.

8. வாசி யருளியவை வாழ்விக்கும் மற்றதுவே
ஆசில் உருவமுமாம் அங்கு

இதுவுமது.

கண்ணழிவு:- வா சி அருளி யவ்வை வாழ்விக்கும் மற்று அதுவே ஆசு இல் உருவமும் ஆம் அங்கு என்பது.

பொழிப்புரை:- திருவைந் தெழுத்தினைக் கணிக்கும்போது சிவத்தை முன்னாக வைத்து அதனுடன் யவ்வும் சேர்ந்தொலிக்கக் கணித்து வந்தால் வா என்ற திருவருளானது ய என்ற உயிரோடு சி என்ற சிவத்தைக் கூட்டுவித்து அவ்வுயிரைப் பேரின்பத்தில் வாழவைக்கும் மற்றந்தத் திருவருளே இறைவற்கு உருவாயும் நின்று சிவம் உன் அறிவுக் கண்ணுக்கும் புலனாகும். உச்சரிப்புக்குப் பயன் அதுவே யென்றும் நீ தெளிவாயாக என்றவாறு.

அது சிவாய நம என்பது. உச்சரிக்கும்போது சிவாய என்பதை எடுத்தும் நம என்பதைப் படுத்தும் உச்சரிக்க வேண்டும் என்பதே ஈண்டும் அறிவுறுத்தப்பட்டதாக வுணர்க.

அவ்வாறு தொடர்ந்து உச்சரிக்குங்கால் நமசிவாய, நமசிவாய என்ற தொனியும் தோன்றி உயிரால் கழிக்கப்பட்ட நம என்ற பாசங்கள் இறைவற்கு முன்னால் வைத்து ஆராதிக்கப்படுவது எனவும் சிவாய சிவாய என்ற தொனியால் உயிர் சிவமாந் தன்மை எய்துவது எனவும் ஒரு நிறைவு பாவகனுக்கு உண்டாகக் கூடும் என்றும் இங்கு அறிவுறுத்தியவாறாம் என்க. இந்த அனுபவங்களை எல்லாம் முதனூலாசிரியராகிய மெய்கண்டதேவ நாயனார் சிவஞானபோத நூலுள் விளங்கவே அருளிச் செய்தார் அது,

"இந்துவில் பானுவில் இராகுவைக் கண்டாங்குச்
சிந்தையில் காணின் சிவன்கண்ணாம் முந்தவே
காட்டத்தீயென்னக் கனல்சேர் இரும்பென்ன
ஆட்டானாம் ஓதஞ் செழுத்து" என்பது.

இந்த உரைப்பாட்டில் சிவன் கண்ணாம் எனவும் கனல்சேர் இரும்பு எனவும் கூறப்பட்டதால் பாகவனுக்குச் சிவன் காட்சிப் பட்டானாம் என்பதும் கனல் சேர்ந்த இரும்பு கனல் வண்ணம் பெற்றாற் போலப் பாவகனும் சிவசொரூபம் பெற்றான் என்பதும் அறியக் கிடந்தனவாம் என்க.

யவ்வை வாழ்விப்பதோடு மற்றதுவே ஆசில் உருவமும் ஆம் என்றதால் மற்று வினைமாற்றின்கண் வந்தது.

ஆசில் உருவமுமாம் என்பதற்கு உச்சரிப்பின்போது பாவகனுக்கு அருள் உருவும் கூடுவதாம் என உரைத்தலுமொன்று. கனல்சேர்ந்த இரும்பு கனல் வண்ணம் பெற்றாற்போல உச்சரிப்பின்போது இறையைச் சேர்ந்த பாவகன் இறைவண்ணமும் பெற்றான் என்ற பொருளும் அங்குக் கிடைப்பதாம் என்க.

9. ஆசின்வா நாப்ப ணடையா தருளினால்
வாசியிடை நிற்கை வழக்கு.

இது திருவைந்தெழுத்தைப் பாசவெழுத்துக்களை நீக்கி உச்சரிக்கும் முறையும் ஒன்று உண்டால் என்கின்றது.

கண்ணழிவு:- ஆசு இல் ந வா நாப்பண் அடையாது அருளினால் வா சி இடை நிற்கை - நிற்கையும் வழக்கு ஆம் என்பது.

பொழிப்புரை:- திருவைந்தெழுத்தைத் தொடர்ந்து உச்சரிக்குங்கால் உயிரைக் குறிக்கும் யவ்வானது மல வெழுத்தாகிய நவ்வுக்கும் அருளெழுத்தாகிய வா வுக்கும் இடையே நிற்க உச்சரிக்காமல் அருளெழுத்தாகிய வா வுக்கும் பதியெழுத்தாகிய சி வ்வுக்கும் இடையே நிற்க உச்சரித்தலும் ஒருவழக்கு உண்டாம். ஞானாசிரியனது உபதேசத்திற்குப் பிறகே அவ்வாறு உச்சரிக்க வேண்டும் என்றவாறாம்.

சிவாய நம சிவாய நம என்றிவ்வாறு உச்சரிக்கும்போது உயிரைக் குறிப்பதான யவ்வெறுத்து மலத்தையும் அருளையும் குறிப்பவான நவ்வுளக்கும் வாவுக்கும் இடையே தோன்ற நிற்கும். அது உயிருக்கு ஒரோவொருகால் மலவாதனை யுறுத்தும் என்ற காரணத்தால் அவ்வாறு உச்சரிப்பதையும் இங்கு ஆசிரியர் விலக்கினார்.

திருவைந்தெழுத்தில் பாசவெழுத்துக்களாகிய ந மக்களை விலக்கிச் சிவாய சிவாய சிவாய என்றிவ்வாறு தொடர்ந்து உச்சரிக்கும்போது ய என்ற உயிரைக் குறிக்கும் எழுத்தானது வா என்ற அருளைக் குறிக்கும் எழுத்திற்கும் சி என்ற பதியைக் குறிக்கும் எழுத்திற்கும் இடையே அகப்பட நிற்கும்.

அதாவது அருளுக்கும் சிவத்திற்கும் இடையே உயிர் நிற்குமாறு சிவாய சிவாய சிவாய என்று உச்சரிக்க வேண்டும். என்று இங்கு ஆசிரியர் விதித்தார். உயிரின் பக்குவம் அறிந்து ஞானாசிரியனது உபதேசத்திற்குப் பிறகே அவ்வாறு உச்சரிக்க வேண்டும் என்பது.

நமசிவாய சிவாய நம என்ற இவ்விருவகை வழக்கோடு சிவாய என்ற மூன்றாவதொரு வழக்கும் இங்கு ஆசிரியரால் அறிவுறுத்தப்பட்டதென வுணர்க. இந்த மூன்றாவது வழக்கினைக் குருவினது உபதேசத்திற்குப் பிறகே மேற்கொள்ள வேண்டும் என்பதற்காகவே "அருளினால் வாசியிடை நிற்கை வழக்கு" என்றார் ஆசிரியர்.

அருளினால் என்பதற்கு இங்குக் குருவினால் என்பது பொருள்.

10. எல்லா வகையும் இயம்பும் இவனகன்று
நில்லா வகையை நினைந்து.

இது அத்துவித நெறியில் உறைத்து நின்ற சிவ ஞானிக்கு இவ்வெல்லா வகையும் ஆம் என்கின்றது.

கண்ணழிவு:- இவன் (அத்துவித நெறியில் உறைத்து நின்ற சிவஞானி) அகன்று நில்லாத வகையை தன்மாட்டு உளதாக நினைந்தால் திருவைந்தெழுத்தை மேற் கூறிய எல்லா வகையானும் இயம்பும் என்பது.

பொழிப்புரை:- அத்துவித நெறியில் உறைத்து நின்ற சிவஞானி யானவன் சிவனை ஒருகணமும் பிரிந்து நில்லாத நிலைமை தன்மாட்டு உளதாக நினைந்தானாயின் அவன் மேற்கூறிய எல்லா வகையானும் திருவைந்தெழுத்தைக் கணிப்பான் என்றவாறு.

எனவே அன்னோன் திருவைந்தெழுத்தை எவ்வாறு கணிப்பினும் அவற்கு இடையூறு புகுதா என்பதாம்.

மேலான அத்துவித நெறியில் உறைத்து நின்ற சிவஞானி ஏகனாகி இறைபணி வழுவாது ஒழுகி நிற்பன் ஆகலானும், அவனைப் பாசம் ஒருவாற்றானும் பற்றாதாகலானும் அவன் திருவைந்தெழுத்தை எந்த வகையானும் கணிப்பான், யாம் கூறும் இந்த விதிமுறைகள் அவனுக்கில்லை என்பதே இங்கு ஆசிரியர்க்குக் கருத்தாம் எனவுணர்க.

நீரில் நன்கு நீந்தப் பழகிய ஒருவன் கை கால் முதலியவற்றைச் சிறிதும் அசைக்காமல் நின்றேயும் அவன் நீர்மேல் மிதப்பான், நம்மனோர் போல அவன் நீரில் ஆழ்ந்து விட மாட்டான் என்பது போல இதனை உணர்க.

நினைந்தால் எனற்பாலது நினைந்து என நின்றது. அது தொகுக்கும் வழித் தொகுத்தல்

**ஒன்பதாமதிகாரம் முற்றியது.**

## பத்தாம் அதிகாரம்

# அணைந்தோர் தன்மை

அஃதாவது பதிப்பொருளாகிய இறைவனது திருவருளில் தோய்ந்து நின்ற சிவஞானியர் தன்மையைக் கூறுவது. அது மேற்பல வதிகாரத்தானும் உணர்த்தியதே யானாலும் அவ்வனைத்தையும் இங்குத் தொகுத் துணர்த்துகின்றார் ஆசிரியர் என்பது. அதனால் அவை எல்லாவற்றுக்கும் இறுதியில் வைத்து இதனை உணர்த்தினார். இதனானே அவற்றுடன் இதற்குள்ள இயைபு விளங்குவதாம்.

1. ஓங்குணர்வி னுள்ளொடுங்கி உள்ளத்தி லின்பொடுங்கத்
தூங்குவர்மற் றேதுண்டு சொல.

இது சிவனை அணைந்து நிட்டை கூடி அருளில் தூங்குவார் இயல்பு கூறுகின்றது.

கண்ணழிவு:- சிவஞானியர் ஓங்கு உணர்வினுள் ஒடுங்கி உள்ளத்தில் இன்பு ஒடுங்க நிட்டையில் தூங்குவர். அத்தூக்கத்தில் அவர் வாயிலுந்தான் சொல் ஏது உண்டு என்பது.

பொழிப்புரை:- இறைபணி நின்ற சிவஞானியர் தம் உள்ளமெல்லாம் நிறைந்து வழிகின்ற ஞான உணர்வினுள் உணர்வாய் நின்ற திருவருளிலே தம்மை ஒடுங்கப் பண்ணித் தம் உள்ளத்தில் அத்திருவருளில் தோய்ந்ததனால் உண்டாகின்ற இன்பமும் ஒடுங்கி நிற்க இவ்வாறு தம் உணர்வில் யாதொரு விகாரமு மின்றியே நிட்டையில் அசைவின்றித் தூங்கிக் கொண்டிருப்பர். அந்நிலையில் அவர் வாயிலுந்தான் சொல்லேது - ஒரு சொல்லும் இராது என்றவாறாம். என்வே அஃதோர் நிரதிசய வின்பமாம் என்றபடி.

அவர் எந்நேரமும் உச்சரித்து வாராநின்ற திருவைந்தெழுத்து மொழிதானும் நிட்டையில் இராது என்பார் "ஏது உண்டு சொல்" என்றார் ஆசிரியர்

ஆன்மா முன்னர்ச் சகலநிலையில் இருந்தபோது கேவலத்தின் பாற்பட்டு ஆணவ மலத்தால் அவத்தையிற் கிடந்து தூங்கிய தூக்கம் உணர்வின்றித் தூங்கிய தூக்கமாம். இஃதன்னதன்று ஓங்கு உணர்வினுள்

ஒடுங்கி உள்ளத்தில் இன்பு ஒடுங்கத் தூங்கும் தூக்கமாதலின் இஃதிறை யுணர்வோடு தூங்கும் தூக்கமாம். இதைத்தான் தூங்காமல் தூங்கும் தூக்கம் என்பர் தாயுமானவர்.

2. ஐந்தொழிலுங் காரணர்க ளாந்தொழிலும் போகநுகர்
வெந்தொழிலும் மேவார் மிக.

இது அணைந்தோர் அணைந்தின்புறும் ஒருதொழிலேயன்றி வேறு தொழில் விரும்பார் என்கின்றது.

கண்ணழிவு:- ஐந்தொழிலும்....................மிகமேவர் என்பது.

பொழிப்புரை:- பதிப்பொருளாகிய இறைவன் புரிகின்ற ஐந்தொழில் அதிகாரங்களையோ, அத்தொழில்கட்கு உரியராக ஆகமங்களில் ஒரோவிடத்து உபசாரமாகச் சொல்லப்படுகின்ற அயன், மால் முதலான வேறு ஐவர் தம் அதிகாரங்களையோ துறக்கவின்பம் நுகர்ந்து கொண்டிருக்கின்ற் இந்திரன் முதலான விண்ணவர்தம் அதிகாரங்களையோ இந்தச் சிவஞானியர் சிறிதும் விரும்பார் என்றவாறு.

இறைவனை அணைந்து இன்புறுகின்ற அந்த ஒரு தொழிலையன்றி வேறு எதையும் அந்தச் சிவஞானியர் நாடார் என்றபடியாம்.

மேவார் - விரும்பார் மேவலின் மிகுதி பெரிது ஆனமையின் மேவாமையின் மிகுதி சிறிதாயிற்று. ஆகவே மிக மேவார் என்பதற்குப் பொருள் சிறிதும் விரும்பார் என்பதாயிற்று. அங்கு மிக என்புழி ஒரு உம்மை தொக்கது. அத இழிவு சிறப்பு.

3. எல்லா மறியு மறிவுறினு மீங்கிவரொன்
றல்லா தறியார் அற.

இது சிவஞானியர் இறைவனைப் போன்று எல்லாம் அறியக்கூடிய வியாபக அறிவுடையரே யாயினும் இறைவன் ஒருவனையன்றி வேறு ஒன்றையும் அறிய விரும்பார் என்கின்றது.

கண்ணழிவு:- எல்லாம்..............................அற அறியார் என்பது

பொழிப்புரை:- சிவத்தை அணைந்து நின்ற சிவஞானியர் உலகில் எல்லாவிடத்தும் எல்லாக் காலத்தும் நிகழ்ந்த, நிகழ்கின்ற, நிகழும் காரியங்கள்

அனைத்தையும் அறியக் கூடிய வியாபக அறிவினை இறைவனைப் போல உடையரே யாயினும் இங்கு இவர்தாம் அணைந்து நின்ற சிவம் என்னும் செம்பொருள் ஒன்றைத் தவிர வேறு ஒன்றையும் ஒருதலையாக அறியார் என்றவாறாம்.

"மற்றுப் பற்றெனக்கின்றி நின் திருப்பாதமே மனம் பாவித்தேன், பெற்றலும் பிறந்தேன் இனிப் பிறவாத தன்மை வந்து எய்தினேன்" எனவரும் சுந்தரர் திருவாக்கினை ஓர்ந்து உணர்க. அப்பெரியார் உம்மையில் இறைவனது பாதமொன்றையுமே மனம் பாவித்திருந்தார் என்பதும், பற்றுச் சிறிது வந்தடுத்து மண்ணிலே வந்து பிறந்தார் என்பதும் அவர் அறிந்திருந்தமை உணரலாம்.

அற அறியார் - ஒருதலையாக அறியார்

எல்லாம் அறியும் தகுதி அவர்க்கிருந்தாலும் அவர் தாம் சிவனுக்கடிமை என்பதை மறவாராதலின் ஒன்றும் அறியார் என்றார். இதனை மறந்து அதனை அறியார் என்றபடியாம்.

சிவனருள் ஒன்றே அவர் அறிவை முற்றுமாய்க் கவர்ந்து நிற்குமாதலின் ஒன்று என்றது அதனையே குறித்து நின்றது.

அறியார் என்றது அறிய விரும்பார் என்றதாம். சிவனோடு ஒப்ப ஒழுகார் என்றவாறாம். என்றது அவன் ஆண்டானும் இவன் அடிமையுமாய் ஒழுகுவர் என்றதாம்.

4. புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவார் போதார்
தலநடக்கும் ஆமை தக.

இதுவுமது

கண்ணழிவு:- தலம் நடக்கும் ஆமை தக புலன் அடக்கி தம் முதற்கண் புக்கு உறுவார் போதார் என்பது.

பொழிப்புரை:- தண்ணீரில் வாழ்கின்ற ஆமையானது தலத்தில் நடக்க வரும்போது தனக்கு இடர் வருமெனத் தெரிந்தால் தனது உறுப்புக்கள் ஐந்தையும் ஒருசேர அடக்குமாப் போலத்தம் புலன்கள் ஐந்தினையும் ஒரு

சேர அடக்கிச் சிவமுதற்பொருளது திருவருளிலே தோய நின்ற சிவஞானியர் அதனை விட்டு ஒருபோதும் வெளியே வாரார் என்றவாறு.

வெளியே வாரார் என்றது உலகப்பற்றில் ஒருபோதும் தோயார் என்றதாம்.

துறவியர் ஆமைபோல் ஐந்தடக்கலை வள்ளுவரே முதலில் எடுத்து மொழிந்தார். அது "ஒருமையுள் ஆமை போல் ஐந்தடக்கலாற்றின் எழுமையும் ஏமாப்புடைத்து" என்பது.

உலகவின்பம் அவர்க்கொரு பொருட்டன்று என்பது இதனாற் கூறப்பட்டது.

ஆமை இடர் நேராத விடத்துப் பொறிகளை வெளியே நீட்டும். இவர் என்றுமே அடக்கியிருப்பர் என்பார் போதார் என்றார் என்பது கழகப் புலவர் ப. இராமநாத பிள்ளை அவர்களின் விளக்கம். வேற்றுமை நயம் அழகிது.

5. அவனையகன் றெங்கின்றா மங்கவனா மெங்கும்
இவனையொழிந் துண்டாத லில்.

இது சிவஞானியர் நின்ற விடமெல்லாம் சிவன் நின்றவிடமே என்கின்றது.

கண்ணழிவு:- எங்கும் அவன் ஆம் ஆதலின் அவனை அகன்று இவன் எங்கும் நின்றது இன்றாம் அதுபோல அவனும் இவனை ஒழிந்து உண்டாதல் இல் என்பது.

பொழிப்புரை:- உலகில் எவ்விடத்தும் அவ்விறைவனே நிறைந்துள்ளான் ஆதலாலே இந்தச் சிவஞானி எவ்விடத்துப் புகினும் அவ்விடத்தெல்லாம் அவனையகன்று இருந்ததின்றாம். இவனைப் போலவே அவனும் இவனை யொழிந்து உலகில் தோன்றலும் இல்லையாம் என்றவாறு.

இறைவன் உலகில் எங்கும் நிறைந்திருந்தான் என்றாலும், அவன் வெளிப்பட்டுத் தோன்றுவது சிவஞானியிடத்தே என்பார் இவனையகன்று உண்டாதல் இல் என்றார். "நேசத்தர் தம் பால் நிகழும் ததி நெய் போல்" என்றார் முதனூலாரும்.

அனைத்தையும் அறியக் கூடிய வியாபக அறிவினை இறைவனைப் போல உடையரே யாயினும் இங்கு இவர்தாம் அணைந்து நின்ற சிவம் என்னும் செம்பொருள் ஒன்றைத் தவிர வேறு ஒன்றையும் ஒருதலையாக அறியார் என்றவாறாம்.

"மற்றுப் பற்றெனக்கின்றி நின் திருப்பாதமே மனம் பாவித்தேன், பெற்றலும் பிறந்தேன் இனிப் பிறவாத தன்மை வந்து எய்தினேன்" எனவரும் சுந்தரர் திருவாக்கினை ஓர்ந்து உணர்க. அப்பெரியார் உம்மையில் இறைவனது பாதமொன்றையுமே மனம் பாவித்திருந்தார் என்பதும், பற்றுச் சிறிது வந்தடுத்து மண்ணிலே வந்து பிறந்தார் என்பதும் அவர் அறிந்திருந்தமை உணரலாம்.

அற அறியார் – ஒருதலையாக அறியார்

எல்லாம் அறியும் தகுதி அவர்க்கிருந்தாலும் அவர் தாம் சிவனுக்கடிமை என்பதை மறவாராதலின் ஒன்றும் அறியார் என்றார். இதனை மறந்து அதனை அறியார் என்றபடியாம்.

சிவனருள் ஒன்றே அவர் அறிவை முற்றுமாய்க் கவர்ந்து நிற்குமாதலின் ஒன்று என்றது அதனையே குறித்து நின்றது.

அறியார் என்றது அறிய விரும்பார் என்றதாம். சிவனோடு ஒப்ப ஒழுகார் என்றவாறாம். என்றது அவன் ஆண்டானும் இவன் அடிமையுமாய் ஒழுகுவர் என்றதாம்.

4. புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவார் போதார்
தலநடக்கும் ஆமை தக.

இதுவுமது

கண்ணழிவு:- தலம் நடக்கும் ஆமை தக புலன் அடக்கி தம் முதற்கண் புக்கு உறுவார் போதார் என்பது.

பொழிப்புரை:- தண்ணீரில் வாழ்கின்ற ஆமையானது தலத்தில் நடக்க வரும்போது தனக்கு இடர் வருமெனத் தெரிந்தால் தனது உறுப்புக்கள் ஐந்தையும் ஒருசேர அடக்குமாப் போலத்தம் புலன்கள் ஐந்தினையும் ஒரு

சேர அடக்கிச் சிவமுதற்பொருளது திருவருளிலே தோய நின்ற சிவஞானியர் அதனை விட்டு ஒருபோதும் வெளியே வாரார் என்றவாறு.

வெளியே வாரார் என்றது உலகப்பற்றில் ஒருபோதும் தோயார் என்றதாம்.

துறவியர் ஆமைபோல் ஐந்தடக்கலை வள்ளுவரே முதலில் எடுத்து மொழிந்தார். அது "ஒருமையுள் ஆமை போல் ஐந்தடக்கலாற்றின் எழுமையும் ஏமாப்புடைத்து" என்பது.

உலகவின்பம் அவர்க்கொரு பொருட்டன்று என்பது இதனாற் கூறப்பட்டது.

ஆமை இடர் நேராத விடத்துப் பொறிகளை வெளியே நீட்டும். இவர் என்றுமே அடக்கியிருப்பர் என்பார் போதார் என்றார் என்பது கழகப் புலவர் ப. இராமநாத பிள்ளை அவர்களின் விளக்கம். வேற்றுமை நயம் அழகிது.

5. அவனையகன் றெங்கின்றா மங்கவனா மெங்கும்
இவனையொழிந் துண்டாத லில்.

இது சிவஞானியர் நின்ற விடமெல்லாம் சிவன் நின்றவிடமே என்கின்றது.

கண்ணழிவு:- எங்கும் அவன் ஆம் ஆதலின் அவனை அகன்று இவன் எங்கும் நின்றது இன்றாம் அதுபோல அவனும் இவனை ஒழிந்து உண்டாதல் இல் என்பது.

பொழிப்புரை:- உலகில் எவ்விடத்தும் அவ்விறைவனே நிறைந்துள்ளான் ஆதலாலே இந்தச் சிவஞானி எவ்விடத்துப் புகினும் அவ்விடத்தெல்லாம் அவனையகன்று இருந்ததின்றாம். இவனைப் போலவே அவனும் இவனை யொழிந்து உலகில் தோன்றலும் இல்லையாம் என்றவாறு.

இறைவன் உலகில் எங்கும் நிறைந்திருந்தான் என்றாலும், அவன் வெளிப்பட்டுத் தோன்றுவது சிவஞானியிடத்தே என்பார் இவனையகன்று உண்டாதல் இல் என்றார். "நேசத்தர் தம் பால் நிகழும் ததி நெய் போல்" என்றார் முதனூலாரும்.

எங்கும் அவனை யகன்று இவன் இருந்ததின்றாம் என்றது அங்கெல்லாம் இறைவன் அத்துவிதமாயே கலந்து நின்றதை இவன் அறிந்தே நின்றான் என்றதாம். அப்பரடிகள் நின்றதிருத் தாண்டகத்துள் கண்ட அனுபவம் அது.

6. உள்ளும் புறமும் ஒருதன்மைக் காட்சியருக்
கெள்ளுந் திறமேது மில்.

இது சிவஞானியர் இகழ்ச்சியைப் பொருட்படுத்தார் என்கின்றது.

கண்ணழிவு:- உள்ளும் புறமும் ஒருதன்மை காட்சியருக்கு எள்ளும் திறம் ஏதும் இல் என்பது.

பொழிப்புரை:- உள்ளே ஓங்கு உணர்வினுள் ஒடுங்கி நிட்டையில் இருந்த பொழுதும் புறத்தே உலகிற் பல விடத்தும் உலாவித் திரிந்த பொழுதும் சிவனை ஒரு படித்தாயே காணவல்ல மெய்யறிவினையுடைய சிவஞானியர்க்குப் பிறரால் இகழப்படும் செய்கையென ஒன்றுதானும் இல்லை என்றது பிறர் இகழும் இகழ்ச்சியை இவர்தாம் பொருட்படுத்தார் என்றதாம்.

ஏதும் - சிறிதும்.

7. உறுந்தொழிற்குத் தக்க பயனுலகந் தத்தம்
வறுந்தொழிற்கு வாய்மை பயன்.

இது சிவஞானியர் சரியை முதலியவற்றில் நின்றாரைப் போலத் தொண்டு ஒன்றும் செய்யாது வறிதே யிருந்தா ராயினும் அதற்குப் பயன் வீடே என்கிறது.

கண்ணழிவு:- உறுதொழிற்கு தக்க பயன் உலகம் முதலியன ஞானியர் தம் வறிதாகிய தொழிற்கு பயன் வாய்மையாம் என்பது.

பொழிப்புரை:-முதல் மூன்று நிலைகளில் நின்றவர் தாம் தாம் செய்யும் சரியை முதலான தவங்கட்குப் பயன் சாலோகம் முதலாயினவாம். நான்காம் நிலையினராகிய ஞானநெறியில் நின்றவர் தாம் தொழிலின்றி வறிதே இருந்தா ராயினும் அதற்குப் பயன் வீடுபேறே என்பதாம்.

சைவ சித்தாந்த நெறியில் நால்வகை நிலைகள் உண்டு. அவை சரியை கிரியை யோகம் ஞானம் என்பன. இந்த நான்கு நெறிகளும் தவநெறிகளே

என்பது ஆசிரியர் மெய்கண்டார் கருத்து. அது சிவஞான போதத்துள் எட்டாஞ் சூத்திரத்து முதல் அதிகரணத்தில் "ஈண்டு இவ்வாண்மாக்களுக்கு முற்செய் தவத்தால் ஞானம் நிகழும் என்றது மேல் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோஷத்தைக் கொடாவாகலான்" எனவரும் மேற்கோளானும் ஏதுவானும் அறியப்பட்டது. அங்கு வந்த உரைப்பாட்டின் கண்ணும் அவர்களைத் தவஞ் செய்வார் என்றே ஆசிரியர் குறித்தது கொண்டும் அது அறியலாம். அத்தவங்கள் நான்கிற்கும் பயன் வேறு வேறாக உண்டு. அவை சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுக்கியம் என்று ஆகமங்கள் உணர்த்தும் அவற்றுள் சாயுச்சியம் என்பதே வீடுபேறாகும். இந்தச் செய்திகளையே இந்த அருட்பா இங்கு நமக்கு உணர்த்தியது. இது அணைந்தோர் தன்மையைக் கூறும் அதிகார மாதலால் ஞான நெறிக்கு முன்னால் மூன்று நிலையில் நின்றார்க்கும் பயன் இன்னவென்று ஆசிரியர் இங்கு உணர்த்தினார்.

இங்கு வறுந்தொழில் என்றது தொழில் இன்றியிருத்தல் என்பதுதான். வறுமை இங்கு இன்மை குறித்து நின்றது. இதனை அருங்கேடன் என்பது போலக் கொள்க. "சென்று சேர் கல்லாப் புள்ள" என்பது மதுபோல்வதே.

உறுதொழில் எனற்பாலது உறுந்தொழில் என எதுகை நோக்கி மெல்லெழுத்து விரிந்தது. அது விரிக்கும் வழிவிரித்தல்.

உறுதொழில் மூன்று ஆதலின் அவற்றுக்குப் பயன் உலகம் முதலாயின என்று உரைத்தாம். அவை சாலோகம், சாமீபம், சாரூபம் என்பன.

வீடுபேறு சத்தாய் என்றும் உள்ளதாகலின் அது வாய்மை எனப்பட்டது.

தத்தம் என்பதை உறுதொழில் புரிவார் மூவர்க்குக் கூட்டுக.

8. ஏன்ற வினையுடலோ டேகுமிடை யேறும்வினை
தோன்றி லருளே சுடும்.

இது அணைந்தோர்க்குக்கொண்டு வந்ததும் வருவதுமாகிய வினைகெடுமாறு கூறுகின்றது.

கண்ணழிவு:- ஏன்ற வினை உடலோடு ஏகும். இடை ஏறும் வினை தோன்றில் அருளே சுடும் என்பது.

பொழிப்புரை:- சிவஞானியாவான் தான் புசிக்கைக்குத் தன் உடம்பால் முகந்து வரப்பட்ட பழவினையானது அந்த உடம்பு உள்ளளவும் புசிக்கத் தொலைந்து போம். அவற்றைப் புசிக்கின்ற வழியாலே இடையில் ஈட்டப்படும் புது வினையும் அவன் தான் சார்ந்து நின்ற திருவருளாலே சுட்டெரிக்கப்பட்டுவிடும். அதனால் அவற்கு வினைப்பற்று என்பதிராது என்றவாறு.

சிவஞானி இறைவன் உலகுயிர்களோடு அத்துவிதமாய்க் கலந்து நின்ற நெறியினைத் தீரவுணர்ந்து தானும் அவனோடு ஏகனாய் நின்றே இறைபணித்த வழியில் ஒழுகி வரும்போது அவனருளாலன்றி யாதோர் வினையும் செய்யானாகலின் அவனுக்குப் புது வினை தோன்றாது என்னும் கருத்தால் தோன்றில் அருளே சுடும் என்றார் ஆசிரியர்.

பழவினை புதுவினை ஆகியவற்றை முறையே பிராரத்தம் என்றும் ஆகாமியம் என்றும் கூறுவர் சாத்திர நூலார். மெய்கண்டார் அவற்றை முன்செய்வினை பின்செய்வினை என்றார். இந்நூலாசிரியர் அவற்றை ஏன்றவினை ஏறுவினை என்றார்.

இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபால்
முன்செய் வினைமாயை மூண்டிடினும் பின்செய்வினை
மாயை யுடனில்லாது மற்றவன்தான் மெய்ப்பொருளே
யாய வதனால் உணரும் அச்சு.

எனவரும் முதனூலாசிரியரின் அருள் வாக்கினையும் ஈண்டு உய்த்துணர்க வென்பது.

9. மும்மை தரும்வினைகள் மூளாவாம் மூதறிவார்க்
கம்மையும் இம்மையே யாம்.

இது சிவஞானியர் தாம் உடம்போடு கூடிநின்றே மறுமையின்பமாகிய வீட்டின்பத்தைத் துய்த்துக் கொண்டிருப்பர் என்கின்றது.

கண்ணழிவு:- மூதறிவார்க்கு மும்மைதரும் வினைகள் மூளாவாம். அதனால் அவர்க்கு அம்மையும் இம்மையே என்பது.

பொழிப்புரை:- நிறைந்த மெய்யறிவினையுடைய சிவஞானியர்க்கு அவர் தாம் ஏகனாகி இறைபணி நின்ற காரணத்தால் மனம் மொழி மெய்

ஆகிய இம்மூன்றாலும் வரும் புதுவினைகள் அவர் எடுத்து வந்த உடம்புகளுடன் சாராவாம் என்றது அவை அவர் புசிக்கைக்கு வாரா என்றதோடு இனி அவர்க்குப் பிறப்பில்லை என்றபடியுமாம், அதனால் இனி அவர் மறுமையில் துய்க்க விருந்த வீட்டின்பத்தையும் இம்மையில் தானே துய்த்துக் கொண்டிருப்பர் என்றவாறாம்.

சகல நிலையில் சரியை கிரியை யோகமாகிய நற்றவங்களைச் செய்து பழகிய ஆன்மாக்க;ள அடுத்து வரும் இறுதியான பிறவியொன்றில் நற்குடிக்கண் வந்து பிறந்து இருவினை யொப்பென்னும் சமனிலை உணர்வும் வாய்க்ப்பெறும், ஆன்மாக்களின் அந்தப் பக்குவ நிலையினை உணர்ந்து இறைவன் குருவாயும் வந்து அவற்றுக்கு ஞானத்தை உணர்த்துவான். ஞானம் உணர்ந்த ஆன்மாக்கள் உலகத்தோடு தாம் கொண்டிருந்த உடல் உலகப் பற்றினைத் துறந்து இறைவனைச் சிந்தையில் தேடி யுணர்ந்து திருவைந்தெழுத்தை விதிப்படிக் கணித்து ஆன்ம சுத்தியும் செய்துகொள்ளும். பிறகு இறைவனது அத்துவித நெறியினைத் தீர வுணர்ந்து இறைவனோடு தாமும் ஏகனாகி இறைபணியில் நின்றொழுகும். அந்த வொழுக்கத்தால் மலமும் மாயையும் ஆகிய குற்றங்கள் அகல்வதோடு பழவினை, புதுவினையாகிய கன்மமும் அம் முத் தான்மாக்களுக்கு இல்லையாய்ப்போம். மும்மலங்களும் இவ்வாறு கெட்ட நிலையில் இனி அம்முத்தான்மாக்களுக்கு இறப்பும், இறந்தால் மீண்டு வந்து பிறக்கும் பிறப்பும் இராது என்றபடியாம், இப்படியாக அந்தச் சிவஞானிகள் பிறவிப் பாதையைத் தவிர்த்து வீட்டுப் பாதையைத் தேர்ந்து கொண்ட காரணத்தால் இனி அவர்கள் உடம்பு நீத்து மறுமையில் அனுபவிக்கவிருந்த வீட்டின்பத்தை உடம்போடு கூடி நின்றேயும் இம்மையில் அனுபவித்தலும் சாத்தியமே என்னும் கருத்தினால் அம்மையும் இம்மையேயாம் என்றார் அசிரியர்.

மூதறிவார் என்றது மெய்யறிவினையுடைய சிவஞானியர் என்றவாறாம்.

அம்மை - மறுமை இம்மை - இப்பிறப்பு உம்மை - கடந்த பிறப்பு

செய்தலே யன்றி நினைத்தலும் சொல்லுங்கூடப் பாவ புண்ணியங்களில் அடங்குமாதலின் மும்மை தரும் வினையென்றார். அது மனம், மொழி, மெய்களால் வருவது.

10. கள்ளத் தலைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக.

இது சிவஞானியர் தாம் இதுகாறும் சிந்தையில் அரிதிற்றேடி யுணர்ந்து, புணர்ந்து பழகி வந்த அசிந்திதனாகிய அந்தப் பதிப்பொருளை இனி உலகவரின் பொருட்டுச் சிந்தைக்கெட்டும் திருவுருவிலும் வைத்து மாலற நேயம் மலிந்தவர் வேடத்தையும் ஆலயந்தன்னையும் அரன் எனவே கண்டு வழிபடு மாற்றினை உணர்த்துகின்றது.

கண்ணழிவு:- கள்ளத்து அலைவர் துயர்கருதி தம் முதல்வனது கருணை வெள்ளத்துள் மூழ்கி யிருந்தவாறே மாலற நேயம் மலிந்தவர் வேடத்தையும் ஆலயந் தன்னையும் அரன் எனக்கண்டு தொழுவாராய் ஊர் ஊர் தோறும் மிக அலைவர் என்பது.

பொழிப்புரை:- கள்ளம் புரிகின்ற இந்திரியங்களைச் சார்ந்து வாழ்கின்ற உலக மக்களின் துயர் துடைப்பான் வேண்டிச் சிவஞானியர் தாம் தம் முதல்வனது கருணை வெள்ளத்துள் மூழ்கித் திளைத்திருந்தவாறே இதுகாறும் தாம் சிந்தையில் அரிதில் தேடி யுணர்ந்து புணர்ந்து பழகி வந்த அந்தப் பதிப்பொருளை இனிச் சிந்தைக் கெட்டும் திருவுருவில் வைத்தும் வரிபடுவான் வேண்டிச் சிவனடியார் திருவேடங்களையும் சிவாலயங்களையும் சிவனாகவே கண்டு வழிபடற் பொருட்டு ஊர் ஊர் தோறும் ஓயாது அலைந்து திரிவர் என்றவாறாம்.

எனவே இங்குச் சூத்திர நெறியோடு இணைந்த இந்தத் தோத்திர நெறியானது வஞ்சப் புலன் வழியொழுகும் உலக மாந்தரின் துயர் துடைத்தற்காகவே சிவ்ஞானியர் வலிதின் மேற்கொண்டவோர் அருள்நெறியே என்பது பெற்றாம். இதுவே தமிழகத்து சான்றோர்களாகிய திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்க வாசகர் முதலான அருளாளர்கள் உணர்த்திய திருநெறியாம் என்பதும் உணர்க.

இவ்வாறு சாத்திர நெறியோடு தோத்திர நெறியினை முதன் முதலாக இணைத்தவர் சிவஞானபோதம் என்ற முதனூலைப் படைத்த மெய்கண்ட தேவ நாயனாரே யாவர். அவர் ஆகம நெறிப்பட்ட சாத்திர நெறியினை அதன் மரபு குன்றாமல் சிவஞானபோத நூலின் பதினொன்றாஞ் சூத்திரங்காறும் போதித்து முடித்துவிட்டார். தேகாந்தத்தில் சிவஞானி இறுதியாக நின்ற தன் உடம்பினையும் உதறியெறிந்து சிவன் கழலைச் சார்ந்து

வீடுபெற்று விடுவான் என்று பதினொன்றாம் சூத்திரத்தை முடித்த ஆசிரியர் தேகாந்த பரியந்தம் அந்தச் சிவஞானி எவ்வாறு ஒழுக வேண்டும். என்பதை உணர்த்துவாராய் நூலின் இறுதிச் சூத்திரமாகிய பன்னிரண்டாம் சூத்திரத்தைப் படைத்தார். சிவஞானி இதுகாறும் அசிந்திதனாக நின்ற பதியைச் சிந்தையில் அரிதிற்றேடி யுணர்ந்து வந்தான். இனி அவனே அந்தப் பதிப்பொருளைச் சிந்திதனாகவும் கண்டு வழிபட்டு வரலாம் என்ற கருத்தில் "மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே", என்றவோர் விதியை மாணாக்கனுக்கு வகுத்தார் ஆசிரியர். அங்குத்தான் ஆகம நெறிப்பட்ட சாத்திர நெறியோடு திருமுறை நெறிப்பட்ட தோத்திர நெறியும் ஒன்றாய் இணைந்தது. இந்த இணைப்பு ஆசிரியர் மெய்கண்டாருடைய தென்றே நாம் தெளிவாக உணரவேண்டும்.

சாத்திர நெறியும் தோத்திர நெறியும் வேறு வேறான போக்குடையவை. சாத்திர நெறி வடமொழி ஆகமங்களின் அடிப்படையில் எழுந்தது. தோத்திரநெறி தமிழில் உள்ள திருமுறைகளை அடிப்படையாகக் கொண்டது. அது ஆராய்ச்சியால் உணரப்பட்டது. இது அன்பால் தெளியப்பட்டது. அது சரியை முதலான தவங்களைச் செய்து பக்குவப்பட்ட ஒரு சிலரால் மட்டுமே ஏற்கக் கூடியதாயுள்ளது. இது பக்குவம் பெற்ற, பெறாத அனைவராலும் ஏற்கக் கூடியது. சாத்திர நெறிக்குக் கடுமையான பல சாதகங்களைச் செய்து பழக வேண்டியிருக்கும். தோத்திர நெறிக்கு அன்போடு கூடிய வழிபாடொன்றே போதுமானது. இப்படி வேறு வேறான போக்குடைய இரண்டு நெறிகளையும் ஒன்றா யிணைத்துச் சாத்திர நூலை நிறைவு செய்த பெருமை ஆசிரியர் மெய்கண்டாரையே சாரும். மேலும் இதன் விரிவுகளைச் சிவஞான போத நூலுக்கு யாம் எழுதிய விளக்கவுரை நூலிலும், பேருரை நூலிலும் கண்டு தெளிக. முதநூலாசிரியர் மெய்கண்டார் வழியினைப் பின்பற்றியே அவர் மரபில் வந்த உமாபதி சிவனாரும் நூலின் இறுதி யருட்பாவால் சாத்திர நெறியோடு தோத்திர நெறியையும் இணைத்து நூலை நிறைவு செய்தார். அதுவே

"கள்ளத் த்லைவர் துயர்கருதித் தங்கருணை
வெள்ளத் தலைவர் மிக". என்பதாம்.

இங்கு அருட்பாவின் ஈற்றில் வந்த அலைவர் என்ற சொற்குச் சிவஞானியர் சிவனடியார் திருவேடங்களையும் சிவாலயங்களையும் தேடி ஊர் ஊர் தோறும் சென்று அலைவர் என்பதே பொருளாகக் கொள்க. அதாவது உலக நெறியினைக் கடந்து நின்ற சிவஞானியர் உலக நெறிக்கண் தாழவந்து வஞ்சப் புலன்வழி யொழுகும் உலக மாந்தரின் துயர் துடைப்பதற்காகவே அவர்கட்கு

ஒரு எளிமையான வழிபாட்டு நெறியினை உணர்த்துதற் பொருட்டுச் சிவனடியார் திருவேடங்களையும் சிவாலயங்களையும் சிவனாகவே கண்டு வழிபடும் வழிபாட்டு நெறியில் ஊர் ஊர் தோறும் சென்று அலைந்து திரிவர் என்பதாம்.

இந்த உயர்ந்த ஆனால் உலக மாந்தர் அனைவராலும் ஏற்றுக் கொள்ளக்கூடிய மிக எளிமையான வழிபாட்டு நெறியைத் தானே தமிழகத்துச் சான்றோர்களாகிய திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வர் நாயன்மார்களும் ஊர் ஊர் தோறும் சென்று உலக மாந்தர்க்கு அறிவுறுத்திச் சென்றார்கள் என்றும் நாம் இங்கு உணரல் வேண்டும்.

இங்கு இறுதியாக நாம் உணரக்கூடியதாயிருந்தது இதுதான்.

வடவரது ஆகம நெறிப்பட்ட சித்தாந்தம் எவ்வாறு இருப்பினும் இருக்கட்டும். திருமுறை நெறிப்பட்ட சைவ சித்தாந்தமானது சாத்திர நெறியும் தோத்திர நெறியும் ஒன்றா யிணைந்த ஒன்று என்பதே தமிழ் ஆகமம் செய்த மெய்கண்டார் கோட்பாடாகும் என்பது. அதுவே இங்கு இவ்வாசிரியர்க்கும் உடன்பாடாம் என்பதும் உணரப்பட்டது.

**பத்தாம் அதிகாரம் முற்றியது.**

***திருவருட்பயன் விளக்கவுரை முற்றியது.***

உரையாசிரியன் : *திருவோத்தூர் வையாபுரி*
**முருகேசன்.**



## மெய்கண்டான் பண்ணை வெளியீடுகள் :

1. சிவஞான போதமும், விளக்கவுரையும் ரூ. 60-00

2. சிவ நெறி ரூ. 6-00

3. மாயை விளையாட்டு ரூ. 15-00

4. திருவருட்பயன், விளக்கவுரை ரூ. 30-00

5. சைவ சித்தாந்தம், ஒரு புதிய அணுகுமுறை ரூ. 30-00

6. சிவஞான போதப் பேருரை (அச்சில்)